

# க
# ல்
# வெ
# ட்
# டு

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் காலாண்டு இதழ்

இதழ் 5 ★ இராட்சச ஆண்டு சித்திரைத் திங்கள் ★ விலை. ரூ. 1-50

# சுத்தமல்லி சமணச் சிற்பம்

**மா. சந்திரமூர்த்தி**, எம். ஏ.,
பதிவு அலுவலர், மதுரை

இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூர் வட்டம், மல்லாக் கோட்டைக்கு வடக்கே பிரியும் வண்டிப்பாதையில் இருந்து 2 கி. மீ. தொலைவில் சுத்தமல்லிபட்டி என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூரில் உள்ள ஊருணி 'பள்ளி ஊருணி' என அழைக்கப்படுகிறது. சர்வே எண் 34-ல் 7 ஏக்கர் 40 செண்டு பரப்பளவில் பள்ளி ஊருணியும் பள்ளி வயலும் அமைந்துள்ளன. இப்பள்ளி ஊருணியின் மேல் கரையில் பள்ளிமேடு என்ற பகுதியில் சங்குப்புதரின் நடுவே முற்றிலும் இடிந்த சமணக் கோயில் ஒன்றின் கட்டிடப் பகுதிகள் இருப்பது அண்மையில் கண்டு பிடிக்கப் பட்டது. சமணக் கோயிலுக்கு முன்னும் பின்னும் கொடுங்கை, அதிட்டானப் பகுதிகள், முதலியன சிதறிக்கிடக்கின்றன.

சமணக் கோயில் இடிபாடுகளின் நடுவே வெள்வேலமரத்தின் அடியில் 1 மீட்டர் 45 செ. மீட்டர் உயரமுள்ள சமண தீர்த்தங்கரரின் அழகிய கற்சிலை ஒன்று கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. தியானநிலையில் செவ்வக பீடத்தில் அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்கும் தீர்த்தங்கரரின் உருவத்தின் தலைப்பகுதியும், தோள் வரை இரு கரங்களின் பகுதிகளும் உடைந்து விட்டன. தோளில் பின்புறம் திருவாசியும், தலையின் மேல் முக்குடையும் காட்டப்பட்டுள்ளது. இத்தீர்த்தங்கரரின் உருவ அளவு வருமாறு.



| | | |
|---|---|---|
| பீடத்துடன் உயரம் | — | 145 செ.மீ. |
| அகலம் | — | 86 செ.மீ. |

சமண தீர்த்தங்கரரின் பக்கவாட்டில் இரண்டு இயக்கர்கள் கையில் சாமரம்ர ஏந்திய நிலையில் காட்டப்பட்டுள்ளனர். இயக்கர்களின் முடியை கரண்ட மகுடமும், காதை பத்ரகுண்டலமும், கழுத்தை ஆரமும் மார்பை

முத்துத்தரித்த புரிநூலும், இடையை ஆடையும் அணி செய்கின்றன. இவ்வியக்கர் உருவம் ஒவ்வொன்றும் 71 செ. மீட்டர் உயரமும், 19 செ. மீட்டர் அகலமும் கொண்டு விளங்குகின்றன.

தீர்த்தங்கரர் அமர்ந்துள்ள பீடத்தின் கண்டப்பகுதியில் மூன்று அமர்ந்த சிம்மங்கள் காட்டப்பட்டுள்ளன. உருவ அமைதியைக் கொண்டு இத்தீர்த்தங்கரர் சிலே பாண்டியர் காலத்ததாகக் கருதலாம். இவ்வுருவம் இவ்வூர் மக்களால் 'பள்ளி முனி' என்றும் 'பள்ளி ஊருணி முனி' என்றும் அழைக்கப்படுகிறது.

இக்கோயிலுக்கு மேற்கே உள்ள கம்மாயில் உள்ள நீர் மடை 'பள்ளி மடை' என வழங்கப்படுகிறது. சுமார் 182 ஏக்கர் 71 சென்ட் நிலம் பள்ளிமடையால் பாசனமாகிறது. பள்ளிமடையில் இருந்து பாசனம் ஆகும் நிலத்திற்கு 'பள்ளி வயல்' என பெயர். சமணர் கோயிலின் தெற்கேயும் கிழக்கேயும் இப்பள்ளி வயல் பகுதி அமைந்துள்ளது. பள்ளி மடையில் இருந்து 'பள்ளி ஊருணி'க்குச் சிறுகால் வழியாகத் தண்ணீர் பாய்கிறது.

இடிந்த சமணக் கோயிலின் தடயங்கள் பள்ளிமேட்டிலும், பள்ளி ஊருணிக் கரையிலும் சிதறிக் காணப்படுகின்றன. இக்கோயிலே 'காராளன்' என்ற முன்னோர் கோபப்பட்டு சிதைத்துவிட்டதாகச் செவிவழிச் செய்தியால் அறிகிறோம்.

சுமார் 27-ஆண்டுகளுக்கு முன் இப்பகுதியைத் தற்செயலாகத் தோண்டும் போது பஞ்சலோகத்தால் ஆன சமண தீர்த்தங்கரர் உருவம் ஒன்று எடுக்கப்பட்டதாகவும், சிவகங்கையைச் சார்ந்த திரு. ஆர். எம். காசி விஸ்வநாதன் என்பாரால் அச்சிலே சென்னே மியூசியத்திடம் ஒப்படைக்கப் பட்டதாகவும் தெரியவருகிறது.

பஞ்சலோக சமண தீர்த்தங்கரர் சிலே சென்னே மியூசியத்தில் அன்னாரால் ஒப்படைக்கப்பட்டது. அச்சிலே குறித்து மெயில் மேகசின் வார ஏட்டில் 4-9-1949 வெளிவந்த செய்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## JAINA TIRTHANKARA IMAGE

*The weekly Mail Magazine—Sunday 4th September–1949. pp. 11.*

The Madras Government Museum has on display a recently acquired image of a Jaina Tirthankara. It is a copper image and was found near Sivaganga in Ramnad District. Already the Museum possess a representative collection of Jain sculptures, including a Pallava specimen, an Eastern

Chalukyan specimen and a Coastal statue of Tirthankara in the early Pandyan style in Tuticorin in Tinnevely district.

The new addition is important for two reasons. First Jain metal images are rare one to get from these parts.

Secondly as a workmanship of this image is in the later Pandyan style of about 13-14 century AD. it testifies to the prevelance of Jainism in the South Districts in the 14th century.

It is wellknown that the history of Jainism in south India goes back to very early times. During the early centuries of Christian era it was very popular especially in the southern districts of Madras. Kanci and Madurai were two important seats for Jainism. But some where about 650 A.D. it began to suffer a set back owing to the development of Saivism and Vaishnavism. But it did not completely die out and continued to be favoured by a section of people to whom the reported remains of Jaina antiquities are due. For instance this image evidently is a work of the Jainas livings in those places and the Jain temple at Tirupparuttikundran near Kanci is unmistakable evidence of the continuation of the religion there.

*The image:*

The image consists of a seated figure of one of the twenty four Jain Thirthankaras and the two attendant, chauri bearers behind him. The Thirthankara is seated on an elevated throne or asana and is in meditative pose. The back of the throne has the designs of makara and yali on it. The Thirtnankara is not identifiable because of the absence of his cognisance or which is usually found caved on the pedestal of this class or Jain sculptures. But the figure is done beautifully and is full of power which is remarkably suggested by the restrained exaggeration of the breast and shoulder portions and by the calmness of the face. The figure of chauri bearers are also done with care although the eloborate ornamentation a characteristic of the period' weighs them down a little. The pedestal has two spykes one one on each side, to receive the aureole or prabha which should have contained the representation of the usual tripple umbrella or Mukkudai design as well as foliage. The image on the whole is well finished but it has suffered slight weathring due to age and the use it might have been put to.

---

ஆசிரியர் குறிப்பு: சென்னை மியூசியத்தில் உள்ள மகாவீரர் செப்புத் திருமேனியை "சிவகங்கை"யில் கிடைத்ததாகக் குறிப்பர். ஆனால் அது சுத்தமல்லியில் கிடைத்தது என்பதையும் அது ஒரு சமணக் கோயிலைச் சார்ந்தது என்பதையும் திரு. மா. சந்திரமூர்த்தி அரும்பாடுபட்டு கண்டு பிடித்துள்ளார். இப்பொழுது கிடைத்து உள்ள கற்சிலையும் செப்புத் திருமேனியும் ஒரே காலத்தவை. கி.பி. 8-9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இது ஒரு அரிய வரலாற்றுச் சிறப்பு மிக்க கண்டு பிடிப்பு.

# ALWARS AND DIVYAPRABANDAM HYMNS IN SRIRANGAM TEMPLE AS GLEANED FROM EPIGRAPHS

DR. R. NAGASWAMY

## Introduction

The recitation of *Divya Prabandam* hymns in the Ranganatha temple at Srirangam has a special significance, since it is intimately connected with the South Indian Vaishnava movements. The religious tradition speaks of the great role played by Nāthamuni, Āḷavandār and Rāmānuja, in the propagation of these Tamil hymns, and their assimilation in the temple rituals. The inscriptions found in the temple throw valuable light on the recitation of these hymns from the historical point of view. It must be admitted that the full texts of all the inscriptions of Srirangam temple except the summaries in A. R. E. reports are not available. So the present study is necessarily limited both in contents and scope and may need revision in the light of the full texts. Nevertheless, it will give a picture of the subject for further elaboration.

## In Chola Times

The earliest reference to the recitation of the hymns of Āḷvār occurs in 1085 A.D, in the reign of Kulottunga I. Āyarkoḷuntu Chakrapāni, alias Vīrachōla Munaiyadariyan of Kōttūr. gifted 50 *Kalanju* of gold for the recitation of Nammāḷvār's *Tiruvāymoḷi*. From the amount so gifted, a land was bought and the proceeds from the same were to be utilised for the purpose. The receipients were:-

1. Thiruvarangattu Nambi.
2. His son, Mannan Thiruvaranga Nambi
3. Mannan Vennaikkūttan *alias* Thirukkannapurattu Araiyan.
4. Mannan Thiruvinnagar Nambi
5. Mannan Thirunāṭṭu Nambi.

The above persons referred to as *koil Nivandakkārar*, (exequtors of temple endowments) agreed to recite *Thiruvāymoḷi* as *Thiruppaḷḷi eḷuchi* hymns (waking the deity daily) "இக்கோயிலில் ஆழ்வாருக்கு திருவாய் மொழித் திருப்பள்ளி எழுச்சி செய்யக்கடவோமாகவும்". The donor Vīrachola Munaiyadaraiyan was a Commander of Kulottunga I.

The inscription is interesting in many ways. 1. The *Thiruvāymoḷi* hymns were sung in the temple daily as early as 1085 A.D. 2. There was a tradition of singing the *Thiruvāymoḷi* hymns of Nammālvār as *Paḷḷi eḷuchi* in the early mornings

It is not known how many hymns were sung in the morning on the occasion. It is known that Nammāḷvār has ten verses on the presiding deity of Sri Rangam, beginning with "கங்குலும் பகலும் கண் துயில் அறியான்" (In my opinion even the ten hymns beginning with ,,உண்ணிலாவிய ஐவரால் also was sung in praise of Rangantha, for in the end Nammḷāvār sings—

> புண்டரீக கொப்பூழ் புனல் பள்ளி அப்பனுக்கே
> தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்
> சடகோபன்

which is a clear reference to Ranganatha. In all probability one of these songs was sung as *Paḷḷieḷuchi.*

3. It is interesting to note that those who recited these hymns were known as Nambis and Araiyars. The singing of Vaishnava hymns in the Srirangam temple by Araiyar is a unique tradition preserved to this day and the tradition is one thousand years old.

4. It is generally believed that Kulottunga Chola was the persecutor of Ramanuja. But from this inscription we see a commander of Kulottunga, endowing land for the recitation of *Thiruvāymoḷi.*

5. The commander is called Āyarkoḷundu, a darling of Āyars, connected with the family of Krishna, recalling the *Divya prabanda* hymn, *Āyar tam Koḷunde* (508/S II. III.)

Another inscriprion also refers to a gift of land by the same commander Vīrachola Munaiyadarayar of Kottur, for the recitation of *Thiruvāymoḷi* (120/1947-8). It is not known whether this gift was another endowment or relates to the same endowment. The inscription refers to the deity of Ranganatha as *Anantanārāyanaswami*, of Thiruvarangam.

About 25 years later another endowment was made for the recitation of *Thiruvāymoḷi.* This time the donor was Sīrālan Thirucchirrambalam Udaiyār *alias* Vīraviccādara Mūvenda Velār, another officer of the king who bought certain land in Karaikkudi, in Vilanādu, and endowed it to the temple by stipulating a quantity of paddy to be made over to the temple for the recitation. (119/1947-8).

In the reign of Vikramachola there is a reference to a flower garden named after Āndāl, called in the inscription as *Āndāl Thirunandavanam* (39/1948-9), which shows that by the beginning of the 12th century Kodai was also held in high esteem in Srirangam temple.

## In Vijayanagar Times—the Ubhaya Vedanta

In the year 1508 A.D., there is a reference to a gift of land for offerings to Kūrattālvār by one Srirangarāyar, son of Kurucheti Vobularaju. The next epigraph of interest, relates to the reign of Vijayanagar ruler Achyutaraya, in Saka 1462 (1541 AD.) It records the endowment of 146

*pon* for the recitation of the Vedas and *Thiruvāymoḷi* on a specified day during the annual festival. The donor was one Akkācchi Amman, a great Vaishnava devotee. It was entrusted in the hands of her teacher Koyil Kandāḍai Annan of *Vātula gotra*.

This inscription is also of great interest for it refers to Koil Kandāḍai Annan as the teacher of the donor. He figures as the desciple of Manavāḷa Mahāmuni, the great Vaishnava teacher of the Tenkalai school, who is assigned to the period 1370–1443 A.D. (K. V. Raman. Sri Varadaraja perumal temple, Kanchi P. 73). The present inscription is dated in 1541 A.D. (Saka. 1462). If the date of Manavāla Mahāmuni is correct, there is a period of one hundred years bettween his death and the present epigraph in which Koyil Kandāḍai Annan is said to be living. It is not known whether successive persons of an institution at Srirangam, held the same name "Koyil Kandāḍai Annan". If however he is the same Koyil Kandāḍai Annan, Manavālamahāmuni should have lived a few years later which is not unlikely. But the point of interest is that provisions were made by this lady for recitation of both Veda and *Thiruvāymoḷi* a clear tradition of the southern school of Vaishnavism and that was at the instance of Koyil Kandāḍai Annan who was closely associated with that school.

In the year 1555 A.D., a certain Mahāmandalesvara Obbularāju, son of Konēti Ayyan, reconstructed the *mantapa* of Thiruppān Āḷvār which had fallen into ruins and made provision for the worship of the deity when it halted in the mandapa, on the occassion of the Virūppanna Udaiyar festival in the month of *Chitrai* (376/53–4).

In 1557 A.D. (Saka. 1499) a lady Ammaiyangār, arranged for special worships and offerings on the natal stars of all the Āḷvārs, Sūḍikkoḍutta Nācciyār and Sri Ālavandār. The propagation of the *Divyaprabandam* hymns and the importance given to the Vaishnavite Āḷvārs by Ālavandār is well known. This epigraph seems to confirm the close link between Ālavandār and the Ālvārs (351/1953–4). The lady donor hailed from the Kandāḍai family and is described as a younger sister of Srirangacharya the son of Bhavanacharya and the grand son of Nayanacharyar. The village gifted was Kondangi also called Timmarajapuram near Thiruvarur.

In saka 1479 (1587 A.D.), special worship was instituted for celebrating the *Thirunakshtra* (natal asterism) of Kūrattālvār and *Thiruvadhyayana* festival of the Bhattar. The donor was one Rangaraju, son of Pochiraju who gifted 3000 *chakravarāha*. Regular worship for Kūrattāḷvar was arranged. In the history of Sri Ramanuja,

Kūrattā̤lvar's intimate connection is well known. It is interesting to note that as early 1587 A.D. gifts were made for worshipping both Kūrattālvān and Ramanuja.

In the year 1588 A.D. (Saka 1510) one Alagiyamanavālan, a *Tambiran* reciting *Thiruvāymoḷi* before the god, endowed land and money, for performing special worship and offerings to Nathamuni Ālvār on the day of his natal star *Anusham.* This worship was to be performed once in six months. The offerings was to be distributed among the Srivaishnava devotees after the worship (337/1952-3).

In 1608 A.D., an endowment was made for special worship and offerings of curd rice on the days of the natal stars of *Periyālvār* and others (326/1952-3). In 1626 a reference is made to the *Divya Prabandam* of Thirumangai Alwar (208/1951-52).

The institution of special worships to Nāthamuni, Ālavandār, the importance given to the Ālvārs and their hymns, and the provisions made for singing both the Vedas and *Thiruvāymeḷi* hymns, indicate the flowering of the southern school of Vaishnavism as a dynamic media in the 16th cent. A.D.

---

## பரிசு

கல்வெட்டில் 'பரிசு' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இது என்ன சொல்? எதைக் குறிக்கிறது? என ஐயம் எழலாம். தர்ம சாத்திரங்கள் என்பவை பண்டைய சட்ட நூல்கள். இவற்றில் தானம் செய்தல், விற்றல், ஆகியவற்றை எவ்வாறு செய்தல், எவ்வாறு பதிவு செய்தல் என்பவற்றைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இவை வடமொழியில் உள்ளன. மனுதர்ம சாத்திரம் யாக்ஞுவல்கியர், பிரஹஸ்பதி முதலியோரின் தர்ம நூல்கள் புகழ் பெற்றவை. இவற்றில் தானத்தைக் குறிக்க 'ஸ்ப்ரு' என்ற மூலச் சொல்லும், 'ஸ்பர்ஸ' என்ற சொல்லும் பயன்படுத்தப்படுகின்றன. 'ஸ்பர்ஸ' என்ருல் தானம் என்று பொருள். Sparsa-a gift offering; Spars-to give, offer, present (Monier williams-dictionery) இது மஹாபாரதம், மனுஸ்ம்ருதி ஆகிய நூல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆதலின் 'பரிசு' என்ற சொல், 'ஸ்பர்ஸ' என்ற சொல்லிலிருந்து 'சட்ட நுணுக்குச் சொல்லாக'க் கல்வெட்டுகளில் பயன் படுத்தப்பட்டுள்ளது.

தளவாய் முதலியாரவர் பேரில்

# அமுதரஸ மஞ்சரி

(சென்ற இதழ் தொடர்ச்சி)

ஏடு 9

யுதிக்கின்ற பூரணசந்தி ரோதயனைப் போலே
மதிக்குங் குணங்களெல்லாம் வாய்ந்துலவி – துதிக்கும் 100

யரியர பாலர்புனை யத்திரம தாகி
யரிய நாட்பூவின் டலர – கரமதிலே 101

தாங்குவளை மாலைநிகர் தன்மை நிறமுடைய
பூங்குவளை மாலை புனைபுயத்தான் – தேங்கமழும் 102

மன்றல்கொடை வாகை வகையென்னு ளுந்துலங்க
முன்றிலதிர் மூன்று முரசினன் – வென்றிதரு 103

பொன்னித் துறைவர்கொடிப் புல்லாக வேதாம்பிர
பன்னித் துறைவர் பதாகையே – துன்னுங் 104

கொடுமரம தாகிநாண் கொண்டுடலங் கூனத்
தடமார் வழுதி துசந்தானே – திடமாம் 105

உடலம் பயங்கொண்டு களத் தான்மேலாய்க்
கடலுலகெ லாமுழுதுங் காப்பான் – வடிதமிழே 106

கற்றவர்க்கும் யார்க்குங் கனபோகந் தானழித்துக்
கொற்றமிகு மேழிக் கொடியினன் – உற்றகுடி 107

மின்னுணை நோக்கிமிளிர் பொன்னுணைப் புனைந்தோன்
றன்னுணை நாட்டுசெய சங்கிராமன் – நன்னயமே 108

கூராழி தாங்குங் குமாரசுவா மித்தளவாய்
காராளர் கோனீன்ற கண்மணியாம் – நேரார்தங் 109

கொட்ட மடக்குங் குமாரசுவா மித்தளவா
யிட்டமுட னீன்ற விருநிதிய – மட்டதிக்குங் 110

கோமானென் றேத்துங் குமாரசுவா மித்தளவாய்
மாமா லுதவு மவர்பாலன் – மாமருவ 111

ஏடு 10

கொற்றவன் செங்குன்றைக் குமாரசுவா மித்தளவாய்
பெற்றவர் பால பிறவடீகன் – வெற்றிதரு 112

சேனைத் தளவாய் திருமலையப் பன்கமல
மானைத் தழுவும் மணவாளன் – மேன்மைதிகழ் 113

செல்வத் தளவாய் திருமலையப் பன்பழகுங்
கலவித் திடவிசைய காண்டீபன் – வில்விசையஞ் 114

சேருந் தளவா திருமலையப் பன்கருணை
கூரு மமுத குணசீலன் – சூரரண 115

தீரன் தளவாய் திருமலையப் பன்கொடைவித்
தார னுபலளித சல்லாபன் - காரனைய 116

செங்கைத் தளவாய் திருமலையப் பன்றரும
மங்கை மனதை மகிழ்வித்தோன் - பொங்குற்ற 117

சிங்கமிவன்னெ னவேண்டி காந்தமுங்கொண் டாடுசெய
துங்கமக ராச துரந்தரிகன் – எங்கள் 118

அருமைத் துரைதித்தா ரப்பநர பாலன்
பெருமைத் தமிளறிவி பேகன் - கரபாரி 119

மண்டலிகர் கண்டன்விக்கிற மாற்கனுமை கல்லியாணி
தொண்டன் குமார சுவாமிமன்னன் – மண்டலத்தை 120

நீதிவமு வாமல் நீடூழி காக்ர கூமது
தனனி ராம சுவாமியெனும் – நீதிமன்னர் 121

சுகள்மனங் கூர்சிறிய தாதையென வந்துதித்த
ளகல் லியாண மகாராசன் – செங்கோன்மைப் 122

பரியம் பரிக்கவே வந்தருள்கு
ன் வெகுயோக பிறபலவான் – செரனென 123

ஏடு 11

வந்த குமார சுவாமி மகீபதியைத்
தந்தரே குரமாவ தாரமால் – எந்தை 124

தருமந்தவம் புரியுந் சாந்த குணமு
மருமந்த பூசனையு மன்பு - மருவிவளர் 125

காவித்தார் பூண்டவள சுப்பமகி பாலனையே
யாவித் துணையென் றகமகிழ்வோன் - தேவசிவ 126

பூசாது ரந்தரிகன் பூமண்டல ந்துதிக்கும்
வாசால கன்குவளை மற்புயத்தான் நேச - மிக்காய் 127

ஈட்டுந் தமிள்மேக மெண்டிசையு மேதுலங்க
நாட்டும் புகள்ச்சாமி நாதனையுங் – கூட்டும் 128

அலையார் கடலுண் டவன்போல வெண்ணென்
கலையார் கடல்பயிலுங் கண்ணன் சிலைமத – வேள் 129

தென்னம் பலச்சோலை சேருமாவண் டூர்வாள்
பொன்னம் பலநாத பூபனையும் – பன்னுகின்ற 130

கல்விவெங்க டாசலவிற் சாமனையுங் கன்னனைப்போல்
நல்குங் கொடைவயித்திய நாதனையும் – வில்வவன 131

நாதமாய் முன்னுதித்த நங்கள்ள சுப்பன்மது
சூதனுங் குமார சுவாமிமால் – எதுமொழி 132

தத்தையனையார் மோகன தாணவ ராயனையு
மைத்துனனென் றேதும் வரிசைமால் – நத்துலவும் 133

ஏடு 12



ஏடு 13

கள்ளர் குதித்தோடி வருங்காட்சிபோல மேலேறி
மெள்ளக் குதித்து விரைந்தோடி – மள்ளரிலே 152

முன்னே யொருவன் முரசறைந்து செல்லாமல்ப்
பின் வேலையாழும் பெருகாமல் – முன்னேறிக் 153

கால்வெட்டிக்கொண்டு சிலர்கை சடைத்து நில்லாம
லோலமிட்டுக் கொண்டு சிலரோடாமல் – வேலையெனக் 154

காட்டுங் குளங்கடொறுங் கட்டாமற் செய்மடையி
லோட்ட மெடுத்தோடை தோறுமோடாமல் – நாட்டிடத்தில் 155

ஏந்திளை யார்க்கும் பத்தெடுத்துச் சிதரும
லாய்த் தோர்துதிக்கு மமுதமே – வாய்ந்த 156

வமுத சஞ்சீவி யென்பதாருடைய நாம
முமது திருநாம மொன்றே – தமதுரிமை 157

யாதிப்பேர் வள்ளிக் கமுதவல்லி யென்றலவோ
சோதிக்குமரவை டொழ சேர்ந்தான் – மேதினியில் 158

அம்புலிக்கு முன்பேர முதகிரண னென்றே
தும்பைமுடி மீதிலெம்மான் சூட்டினன் – செம்பாகஞ் 159

சாரவரும முதசற்கரை யென்றார் தெலா
மாருடைய நாமம முதமே – பேருறுங் 160

ஏடு 14

கல்லியாண வீட்டில் கருணைபெறநீ புகுந்தா
லல்லாலொரு கருமமாகாதே நல்ல – நல்ல 161

பாலும் புதிய வடிபானையுங் கண்டாலுடனே
யேலுமினிப் பொங்கலிடு மென்பார் – மேலும் 162

அழகுடனேபாலு மறுகுங் குற்றென் பார்
பழமுனமுன் பேரைப் பகர்வார் – மழவிடையோன் 163

முன்னாளிலேயோர் முனிவன் மதலைக்காக
வன்னாழிலுன்னை யளித்தன்றோ பன்னாளும் 164

தேவாரமே முதலாய்ச் செந்தமிள் தோறுங்
கதையாய்ப் பாவணராராய்ந்து பாடலுற்றார் – நாவணர் 165

ஐந்து நிலத்தும் பாலையற்புதமென் றேதுதல்நீ
தந்த திருநாமத் தன்மையன்றோ – மைந்தருக்குச் 166

சென்மிக்குங் காலையில்நீ சேனையோடு போயிருந்து
கன்னம் பேற்வளர்த்த தாலன்றோ – பின்னுமுன்பேர் 167

பாலரென்றே கூறப் படைத்தார ரசரும்
பூபாலரென்றுன் பேரே பரிக்கின்றார் – நாலுதிக்கில் 168

தென்பால்வடபால் சிறந்தகீள்பால் மேல்பா
லன்பாலிவன் பாலவன் பால் வன்பாலும் – மென்பாலும் 169

ஆண்பாலும் பெண்பாலுமப் பாலுமெப்பாலு மாண்
பாலுரைக்க வருபொருட்பால் வீண் 170

( தொடரும் )

# PANDYA-ALUPA COINS

Dr. R. Nagaswamy

Sir Walter Elliot in his work "Coins of Southern India" has illustrated three coins under the Pandyas. (Nos. 129, 130, and 131).

'129: Gold. Weight 57 grains. Obverse-two fish under an umbrella flanked on right by lamp and on left by chowrie, sun and moon above. Reverse-legend in Nagari uncertain (Conf. Ass-Res-XVII 592-3 Pl. IV. P. 81.)'

'130: Gold. Weight 6-5 grains. Obverse-two fish. Reverse inrecognizable'.

'131: Gold. Weight 6-2 grains. Obverse a fish. Reverse figure before an altar. These two coins Nos. 130, 131 with several others having one or two fish or a boar were found in Rajamahendri and may be connected with Chola-Chalukya period.'[1]

Writing on the same subject Sir. T. Desikachari states:

Pandyan gold coins are met with but rarely and are generally illdesigned fanams bearing on the obverse the figure of a man and on the reverse the legend which if complete may be read as 'Sundara Pandyan'. The late Lieut General Pearse in his papers, bequeathed to the Government Central Museum, gave the following description of a gold coin which he procured in a London market for sixteen shillings. Obverse: Two fishes lying horizontally. Above is an alligator. Two standards or dhvajasthambas or Pillars of Victory are supporters of central design.

Reverse: Three lines of old, bold nagari character which have not been read. Col. Mackenzie noticing a coin of the same description atributes it to the ancient Pandyas.[2]

Following the above, Sir T. Desikachari hazarded a guess, quite correctly in the following lines.

"Similar coins were found iu South Canara which were probably issued by a branch of the Pandyas who had settled there"[3]

Sri Vidya Prakash, repeats the same identification in his "Coinage of South India" and quotes Mysore Archaeological Survey Report and Biddalup.[5] He writes

"The coins with fishes associated with conch and wheel and Nagari legend *Sri Pandya Vanarapa*, may be attributed to Maravarman Sundara Pandya. The coins bearing Kannada legend' *Sri Pandya Dhananjaya*' may also be attributed to Maravarman Sundara PandyaII. Kannada had influenced the Pandya coinage because of close matrimonial relationship of the Pandyas and the Hoysalas. Maravarman Sundara Pandya was a sister's son of Hoysala King Vira Somesvara."[6]

These coins however are not the issues of the Pandyas of Madurai but were issued by the Alupas, who called themselves Pandyas.

Dr. K. V. Ramesh has shown in his work 'A history of South Kanara'[7] that Alupas assumed the title of Pandyas beginning from the 8th century A.D., when they were conquered by Koccadayan Ranadhira, the powerful Pandya of Madurai. According to Velvikkudi copper plate, Koccadayan defeated the Maharathas at Mangalapura. "*Kongalarum narumpolil vay koyilodu Mayil ahavum Mangalapuram ennum Managarul Maharatarai erindalithu araikadal valagam poduma nihki.*"[8]

Commenting on the above. Sri Ramesh says, It thus becomes that the battle should have been fought at Mangalore and that the ruler who opposed the Pandya was Alupa Chitravahana I"[9]

According to Ramesh, Alupa Chitravahana was the first ruler to claim Pandya lineage.[10] The Pandya records claim a decisive victory over the Maharatha's at Mangalore. So the assumption of the title of Pandyakula by the Alupa might have been due to their defeat and some matrimonial alliance. Since then the Alupas assumed the fiish as their emblem. 'The Alupa kings adopted titles such as Pandita Pandya, Pandya Dhananjaya; Pandya Chakravarti etc. The Alupa king Kundara who ruled between 1220 and 1230 had the title Pandya Dhananjaya."[11] Another ruler Soyidava who ruled in 14th century A.D., also had the same title Pandya Dhananjaya.[12]

Dr. Ramesh has identified the coins bearing the name '*Pandya Dhananjaya*' as the coins of Alupas. "The obverse of these coins depict two fish under an umbrella shaped canopy with a lamp and chouri to their right and left respectively. The reverse contains the legend Sri Pandya Dhanajaya which is one of the characteristic epithets of the mediaval and later Alupas"[13] But he has not noticed Elliot, Desikachari, Biddaulp and others who have identified these coins with the issues of the Pandyas of Madurai. The present article is to correct the identification, lest scholars might think that there were two issues of the same type, one brought out by the Pandyas of Madurai and the other by the Alupas of South Kanara

as has been done by Vidyaprakash. The coins refered to as Chola-Chalukya, coin by Elliot and as the issues of Madurai Pandyas by Desikachari, Biddaulp and Vidyaprakash are in fact issues of the Alupas of South Kanaras. As mentioned earlier, Desikachari already hinted that these were found in South Kanara.

Dr. Ramesh has also drawn our attention to the term *Pandya gadyana* for coins in circulation under the Alupa[14] and also to the terms *honna gadyana* and *pana* occuring in Alupa inscriptions.[15] Two types of gold coins of these series are known. The first type consists of circular coins weighing approximately between 56 to 59 grains. These may be identified with the *Pandya gadyana*, of the Alupa records. The other type include small coins, weighing 5 to 6 grains.[16] These may be identified with the Panas mentioned in Alupa records. The coins bearing the name *Pandya Dhananjaya* in Kannada characters may be ascribed to Alupa, Kundana of 13th century, on paleographical grounds.

As early as 12th century A.D. (1139 A.D) the word *Pandya gadyana* occurs in inscription.[17] It would be interesting to study the paleography on the Alupa coins bearing Nagari and Kannada scripts and a rrange them chronoligically which would throw valuable light on the Alupa coinage.

---

1. Coins of South India-Sir Walter Ellict, P. 152
2. South Indian Coins-Sir T. Desikachari, Tiruchinopali-1933, P. 156
3. Ibid
4. Coinage of South India, Vidya Prakash 1968
5. Ibid, P. 57
6. A history of South Kanara Dr. K. V. Ramesh, 1970, P. 56-61
7. Pandya Copper Plates 1967, P. 25
8. A History of South Kanara, P. 58
9. Ibid, P. 56
10. ,, P. 119
11. ,, P. 133
12. ,, P. 277
13. ,, P. 276
14. ,, P. 277
15. Coinage of South India, P. 56
16. A History of South Kanara, P. 276

# மாவட்டச் செய்திகள்

## கோவை

### நத்தைமேடு

இது தாராபுரம் தாலுகாவில் உள்ள எல்காம் வலசு என்ற கிராமத்தைச் சேர்ந்த பகுதியாகும். இந்த மேடு இருபது ஆண்டுகட்கு முன் நல்ல சேனாதிபதி சர்க்கரை மன்றாடியார்க்கு உரிமையாயிருந்து. இங்குள்ள ஓடையின் கரையில் பலகைக்கல் ஒன்று உள்ளது. இக்கல் பூமியில் புதைந்து கிடந்தது. வேளாண்மைக்கு நிலத்தைப் பண்படுத்தும்போது தென்பட்டது. 7 அடி உயரமும் 2 அடி அகலமும் கொண்டது. கல்லின் ஒரு புறத்தில் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. மற்றொரு புறத்திலும் பக்கவாட்டிலும் கல்வெட்டு வடிக்கப்பட்டுள்ளது. உடுக்கை, குடை, சங்கு, கத்தி, சங்கு, சிங்கம், சூலம், விளக்கு, பந்தம், அங்குசம், பாதம், அரிவாள் ஆகியவை சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. ஒரு மனிதன் மீது நின்றாடும் காளியின் உருவம் வடிக்கப்பட்டுள்ளது. காளிக்கு நான்கு கைகள் உள்ளன. இருபுறமும் சாமரைகள் உள்ளன. பின் வலக்கரத்தில் கத்தி உள்ளது. முன் வலக்கரத்தில் இருப்பதைச் சரியாக விளங்கிக் கொள்ள முடியவில்லை. பின் இடக்கரத்தில் சங்கும் முன் இடக்கரத்தில் உடுக்கையும் உள்ளது. இக்கல்வெட்டு நகரத்தார்கள் (வியாபாரிகள்) கூடி ஊருக்கு நான்கு புறமும், வாசல்களிலும் கல் நட்டு எல்லை வகுத்ததைக் குறிக்கிறது போலும். கல்வெட்டு முழுமையும் இல்லை. இதில் உள்ள பல சின்னங்கள் இக்கருத்துக்களின் சின்னங்கள் போலும்.

கல்வெட்டு வாசகம் பின் வருமாறு :

1. ஸ்வத்தி ஸ்ரீ தெந்க
2. ரை நாட்டு நிலம்
3. பொரணா தேசி
4. திசை மடி எறி
5. யும் எறி வீரபட்ட
6. ணத்து விரபட்ட
7. ணக்கல் அஞ்சு
8. கரை நாடும்
9. அடிக்கிடைகளமும்
10. ம் நகரமிரண்டு
11. ம் பதிநெண்வி

12. ஷையமும் எம்மி
13. விசைந்தபடி [பி] தளத்தில் நாலு வாசலி
14. [வி] ட்டாயதநாலு காலும் சிங்காத
15. னமும் உடையார்க . . .

கல்வெட்டு கி.பி. 13, 14-ஆம் நூற்றாண்டு எழுத்து வடிவில் அமைக்கப்பட்டுள்ளது.

அம்மன் கோயில் : நத்தமேட்டுக்கு வடக்கில் அரைக் கிலோ மீட்டர் தொலைவில் இக்கோயில் உள்ளது. இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கொண்டதாக உள்ளது. கோயில் கீழிருந்து பிரஸ்தரம் வரை கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. விமானம் செங்கல்லால் ஆனது. கருவறையும் அர்த்தமண்டபமும் ஒரு காலத்தவை ஆகலாம். மகாமண்டபம் பிற்காலத்தது.

கல்வெட்டுக்கள் : இக்கோயில் கருவறைச் சுவர்களிலும் அர்த்த மண்டபச் சுவர்களிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. இவை 13-ஆம் நூற்றாண்டு எழுத்துக்களில் அமைந்துள்ளன. பிற்காலத்து நிகழ்ந்த திருப்பணியால் கல்வெட்டுக்கள் இடம் மாறியுள்ளன. சில கல்வெட்டுக்களில் 'விக்ரமசோழ தேவற்கு' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

அர்த்த மண்டப வாயிற்காலில் சுந்தரபாண்டியனுடைய கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டில் இக்கோயில் 'நின்மணியீச்சுரம்' என்று குறிப்பிடப்படுகின்றது.

சிற்பங்கள் : கருவறையில் காளியின் உருவம் உள்ளது. மகா மண்டபத்தில் வீரர்களின் உருவங்கள் சில உள்ளன. இவை பிற்காலத்தவை.

ஈசுரமலை

எல்காம் வலசு கிராமத்திற்கு வடக்கில் இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் இம்மலை உள்ளது. இம்மலையில் பத்துக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. மலை உச்சியில் விக்கிரம சோழ தேவர் வீரராஜேந்திரன் ஆகியோரது கல்வெட்டுக்கள் உள்ளன. இவை கி.பி. 12,13-ம் நூற்றாண்டு எழுத்துக்களில் உள்ளன. இக்கல்வெட்டுக்களில் சோழ அரசர்களுக்குரிய மெய்க்கீர்த்தி ஏதுமில்லை. இராஜராஜ புரம் (தாராபுரம்) குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குள்ள கல்வெட்டில் 'நீர்மணி' என்ற ஊர்ப் பெயர் உள்ளது. நீர்மணி பண்டைக்காலத்தில் பொங்கலூர் நாட்டைச் சேர்ந்தது என்பது கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. தற்போது பொங்கலூர் என்று வழங்கப்படும் ஊரே கல்வெட்டில் பொங்கலூர்கா' என்று குறிப்பிடப்படுகிறது. சோழர் காலத்துக் கல்வெட்டுக்களில் 'மேல் வாசலில் பிள்ளையார் கோயில்' என்றொரு கோயில் குறிக்கப்படுகிறது.

கி.பி. 10-ம் நூற்றுண்டு எழுத்து வடிவில் அமைந்த கல்வெட்டு ஒன்று குறிப்பிடத்தக்கது. இக்கல்வெட்டில் உள்ள மெய்யெழுத்துக்கள் அனைத்திற்கும் புள்ளியிடப்பட்டுள்ளன. கோயில் படாரகருக்கு நிலம் கொடுத்தது பற்றி இக்கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. சேகரி நல்லூர் என்ற ஊர் குறிப்பிடப்படுகிறது. மணியன் என்பவன் நிலம் அளந்துள்ளான். நிலத்தின் மேற்கு எல்லையாக நீர்மணி வாய்க்கால் குறிப்பிடப்படுகிறது. இக்கல்வெட்டில் சில வட்டெழுத்துக்களும் கலந்துள்ளன. தொடக்கத்தில் அரசன் பெயர் எதுவும் குறிக்கப்படவில்லை. கோயில் படிக்குப் பக்க வாட்டில் நிறுத்தி வைக்கப்பட்ட பலகைக்கல் ஒன்று உள்ளது. இதில் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றுள்ளது. அழிந்துபட்ட இக் கோயிலின் எஞ்சிய கல் இது ஒன்றுமட்டுமே. இதுவும் ஒரு நந்தியும் உள்ளது. ஆனல் நந்தி உடைந்து விட்டது. இரண்டு துண்டங்களாக உடைந்த நந்தியின் உருவம் மலையடிவாரத்தில் உள்ளது.

மலையில் பிற்காலத்துச் சிவன் கோயில் ஒன்று உள்ளது. அங்கு கல்லில் செய்யப்பட்ட முருகன்சிலை, லிங்கம் ஆகியவை உள்ளன.

மருதம்பதி

கோயமுத்தூர் தாலுகா மருதம்பதி என்ற ஊரில் தனியார் வயலில் இருந்த பெருங்கற் காலச் சின்னங்கள் ஆய்வு செய்யப்பட்டன. இந்த ஊரின் உண்மையான பெயர் மாவுதம்பதி. இவ்வூர் கேரள மாநிலத்தில் கட்டப்பட்டுள்ள வாளையாறு அணைக்கு அருகில் உள்ளது. பெருங்கல் சின்னங்கள் கோயமுத்தூர் பாலக்காடு நெடுஞ்சாலைக்கு அணித்தாக தென் புறத்தில் உள்ளன. இவை ஒரு ஏக்கர் பரப்பில் இருக்கின்றன. அனைத்தும் கற்திட்டைகள் தாம். தோண்டப்பட்ட ஒன்றைத் தவிர மற்றவை ஒரு மீட்டர் சதுரமுடையவை. ஆனல் நிலம் வேளாண்மைக்கு பயன் படுத்தப் பட்டிருப்பதால் அனைத்தும் அழிந்து விட்டன.

ஓராண்டிற்கு முன் இங்கு வேளாண்மைக்கான கால்வாய் தோண்டினர். தோண்டும்போது 3 மீ சதுரம் கொண்ட ஒரு பலகை தட்டுப் பட்டது. முழுமையாக தோண்டிய பின் இரண்டு கல் திட்டைகள் இருப்பதைக் கண்டறிந்தனர். இரண்டிலும் எலும்புகள் கொண்ட பானைகள் கிடைத்துள்ளன.

கல்திட்டைகள் இரண்டும், ஒன்றையொன்று அணைத்தாற் போல் அமைக்கப்பட்டுள்ளன. 3 மீ சதுரம் கொண்ட சதுரப் பலகைக் கற்கள் நான்கு பக்கங்களிலும் நிறுத்தப்பட்டுள்ளன. கிழக்குப் புறத்தில் உள்ள பலகைக் கல்லில் ஒரு அடி விட்டம் கொண்ட ஒரு துவாரம் இருக்கிறது. இரண்டு கல் திட்டைகளிலும் இந்தத் துவாரம் தனித்தனியே உள்ளது. வடபுறத்திலுள்ள கல்திட்டை 50 செ.மீ. அகலமும், 3 மீ. நீளமும் கொண்ட பலகைக் கல் தரையில் கிழக்கு, மேற்காக நிறுத்தப்பட்டுள்ளது. இந்த பலகைக் கல், திட்டையை இரு சம பாகங்களாகப் பிரிக்கிறது.

பவானி

கோவை மாவட்டம், பவானி வட்டம், பவானி சங்கமேஸ்வரர் ஆலயத்தில் கி. பி. 8, 9-ஆம் நூற்றாண்டு துவார பாலகர் சிற்பங்கள் உள்ளன. கோயில் சில ஆண்டுகளுக்கு முன் முழுமையும் மாற்றித் திருப்பணிகள் செய்யப்பட்டுள்ளது. ஏற்கனவே நாயக்கர் காலத்தில் கட்டப்பட்ட கோயிலின் தூண்களும், சிற்பங்களுடன் கூடிய பலகைக் கற்களும் கோயிலின்கண் ஆங்காங்கே கிடக்கின்றன.

துவாரபாலகர்கள்: இரண்டு கைகளுடன் காட்சி அளிக்கும் துவாரபாலகர்களின் உருவம் கருங்கல்லால் செய்யப்பட்டவை. ஐந்து அடி உயரமுள்ளது. இவ்விரு உருவங்களிலும் இடப்புறமாக தண்டம் வைக்கப்பட்டுள்ளது. தண்டத்தின் மேல் முழங்கையை ஊன்றி நிற்கும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. இரண்டு துவாரபாலகர்களின் வலதுகரம் பூமியை நோக்கித் தொங்கி நிற்கும் காட்சியைக் காணமுடிகிறது. மற்ற துவார பாலகர்களில் காணப்படுவது போல தர்ஜனி ஹஸ்தத்தில் சித்திரிக்கப்படவில்லை. மார்பில் காணப்படும் புரிநூல் வெவ்வேறானவை. இடப்புறத் துவாரபாலகரின் புரிநூல் நார்த்தாமலை விஜயாலய சோழீஸ்வரத்திலுள்ள துவாரபாலகரின் புரிநூல் போல் காட்சியளிக்கிறது. வலப்புற துவார பாலகரின் மார்பில் உள்ள புரிநூல் வேறு விதமானது. கழுத்தில் மணியாரங்கள் காட்சி அளிக்கின்றன. இரண்டு துவாரபாலகர்களின் தலைமுடியிலும் வேறுபாடு காணப்படுகின்றது இடப்புற துவார பாலகரின் தலையில் கரண்ட மகுடம் உள்ளது. வலப்புற துவாரபாலகர் தலையில் மகுடம் ஏதும் இல்லை. தக்ஷிணாமூர்த்திக்குரிய சுருண்ட கேசங்களைப் போன்ற அமைப்புக் காணப்படுகின்றது.

நாட்டிய கரணங்கள்: நாயக்கர் காலத்துக் கோயில் விதானக் கற்களும் தூண்களும் எஞ்சியுள்ளன. பலகைகற்களில் நாட்டிய கரணங்களும் கடவுளின் சிற்பங்களும் சித்தரிக்கப்பட்டுள்ளன. இத்தகைய சிற்பங்களுடன் கூடிய கற்கள் பத்துக்கு மேல் உள்ளன. தூண்களில் நாயக்க அரசனும் அரசியும் வணங்கும் நிலையில் வடிக்கப்பட்டுள்ளன. கீழே கிடக்கும் தூண் ஒன்றில் கெட்டி முதலியாரின் உருவச் சிலையும் அவரது மனைவியின் உருவச் சிலையும் உள்ளன. தலைமேல் "இம்மடி கட்டி முதலியார்" என்று எழுதப்பட்டுள்ளது. யானை மேல் நின்றிருக்கும் சிம்ம தூண்களும் உள்ளன. ஆங்கிலேய கலெக்டர் 'காரோ' அளித்த தந்த பல்லக்கு ஒன்று இக்கோயிலில் உள்ளது. இப்பல்லக்கில் காரோவின் கையொப்பமும், கொடுக்கப்பட்ட ஆண்டும் குறிக்கப்பட்டுள்ளன.

போடுகவாப்பட்டி

கிராமத்தில் உள்ள கோயில்களும் தொல்பொருட்களும் ஆய்வு செய்யப்பெற்றது. இவ்வூரிலிருந்து 2 கிலோமீட்டர் தொலைவில் பாய்ந்தோடும் காஞ்சி ஆற்றங்கரையில் நாகேஸ்வரம் கோயில் திருமுத்து

வாளியம்மன் கோயில் ஆகியவை உள்ளன. ஆற்றின் மேற்குக் கரையில் அமைந்துள்ள இவ்விரு கோயில்களுக்கும் மேற்கில் ஒரு பர்லாங் தொலைவில் வெங்கடேச விண்ணகரம் என்ற கோயில் உள்ளது.

நாகேஸ்வரர் கோயில்: கிழக்கு நோக்கி அமைந்திருக்கும் இக்கோயில் கருவறை, அந்தராளம், அர்த்தமண்டபம், முகமண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது. கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவை ஒரு காலத்தவை என்று கொள்ளமுடியும். முகமண்டபம் பிற்பட்டதாகும். இக்கோயிலில் உள்ள தேவகோட்டங்கள் தேவதைகளின் உருவங்களின்றியே காணப்படுகின்றன. கருவறையில் லிங்கம் மட்டுமே உள்ளது என்று கூறப்பெறுகிறது. அர்த்தமண்டபத்தின் தென்புறச் சுவரின் வெளிப்புறம் முழுமையும் சிதைந்து விட்டது. கருவறை அர்த்தமண்டபம் ஆகியவற்றின் சுவர்கள் அனைத்திலும் கல்வெட்டுக்கள் உள்ளன. அதிட்டான வர்க்கங்களில் ஜெகதி, குமுதம் ஆகியவற்றில் கல்வெட்டுக்கள் உள. வடபுறத்திலும் மேற்குப்புறத்திலும் ஜெகதி வரை மண் மூடியுள்ளது.

இங்குள்ள கல்வெட்டுக்களில் வீரராஜேந்திரன், விக்கிரம சோழன், வீரவல்லாளன் ஆகிய மன்னர்களின் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. சோழ மன்னர்களுக்குரிய மெய்கீர்த்தி கல்வெட்டுக்களில் யாண்டும் காணப்படவில்லை. கல்வெட்டுக்கள் தெளிவாகவும், அழகுபடவும் அமைந்துள்ளன. இராஜகேசரி, திரிபுவன சக்ரவர்த்திகள் ஆகிய அடைமொழிகள் மட்டும் காணப்படுகின்றன. இருபதுக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன. ஏற்கனவே படியெடுக்கப்பட்ட இக்கல்வெட்டுக்களில் சில சிதைந்து விட்டன.

கல்வெட்டுக்களில் இக்கோயில் 'நாகேஸ்வரமுடையார் கோயில்' என்றும் "நாகேஸ்வரமுடைய நாயனுர் கோயில்" என்றும் குறிக்கப் பெறுகின்றது. இங்குள்ள ஊர் 'முட்டம்' என்றும்; 'அமரபுயங்க நல்லூர்' என்றும்; 'ஏவிவர்ம சதுர்வேதிமங்கலம்' என்றும் குறிக்கப் பெறுகின்றது.

காலம்: கல்வெட்டுக்களின் எழுத்து வடிவம் கி.பி. 11-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவை என்று கொள்ளலாம். நிலத்திலிருந்து பித்தி வரை முழுமையும் கல்லால் கட்டப்பட்ட இக்கோயிலின் காலம் கி.பி. 11-ஆம் நூற்றுண்டாகலாம். கோயிலின் சிகரம் வேசர அமைப்புடையது. செங்கல்லால் கட்டப்பட்ட சிகரம் மிகவும் பிற்காலத்தது என்று கொள்ளலாம். ஸ்தூபி சுடுமண்ணுல் ஆனது.

இக்கோயிலின் முன்பு இருந்த பலி பீடம் சிதைந்து காணப்படுகிறது. நந்தி ஒன்று உள்ளது. நந்திக்கு ஒரு சிறு மண்டபமுள்ளது. இது பிற்காலத்தைச் சேர்ந்தது. இக்கோயிலைச் சுற்றி சிற்பங்களுடனும் கல்வெட்டுக்களுடன் பல கற்கள் கிடக்கின்றன.

திருமுத்து வாளியம்மன் கோயில் : இக்கோயில் பல்வேறு காலங்களில் திருப்பணி செய்யப்பட்டிருக்க வேண்டும். இந்தக் கோயில், திருநாகேஸ்வரர் கோயில் அருகில் வடபுறத்தில் கட்டப்பட்டுள்ளது. கருவறை அர்த்தமண்டபம் ஆகியவை சிதையாமல் உள்ளன. தேவ கோட்டங்களில் பரிவார தேவதைகள் இல்லை. கருவறை அர்த்த மண்டபம் ஆகியவற்றின் சுவரின் வெளிப்புறத்தில் சிற்பங்கள் உள்ளன. மேலும் மீன், பல்லி, முருகன் (மயிலும்) விநாயகர் ஆகியவற்றுடன் சில அகவியல் சிற்பங்களும் உள்ளன. இவையும் அங்கொன்றும் இங்கொன்றுமாக உள்ளன. அர்த்தமண்டபத்தின் வாயிலின் மேல் கஜலட்சுமி சிற்பம் உள்ளது. இக்கோயிலின் வெளிப்புறத்தில் கல்வெட்டு ஏதும் காணப்படவில்லை. சிற்பங்களின் வடிவமைதியைக் கொண்டு இக்கோயில் நாயக்கர் காலத்தது என்று கொள்ளலாம். இக்கோயிலின் முகமண்டபம் சிதைந்து விட்டது. நாகரவடிவில் உள்ள சிகரம் மிகவும் பிற்காலத்தது. ஸ்தூபி சுடு மண்ணால் ஆனது. இக்கோயிலின் முன் ஒரு நந்தி உள்ளது. நந்திக்கு ஒரு மண்டபம் உள்ளது.

சிற்பங்கள் : நாகேஸ்வரர் கோயில் முகமண்டபத்திடலில் விநாயகர் சிற்பம் ஒன்றும், தக்ஷிணாமூர்த்தி சிற்பம் ஒன்றும் உள்ளன. அமர்ந்த கோலத்தில் உள்ள தக்ஷிணாமூர்த்தி வலக்காலைத் தொங்கவிட்டு இடக்காலை மடக்கி வலக்காலின் மீது வைத்திருக்கிறார். இடக்கால் பாதத்தை பின் புறத்திலிருந்து நந்தி நக்கிக்கொண்டிருக்கும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆலமரம் உள்ளது. கீழே இரண்டு முனிவர்கள் உள்ளனர். கையில் பாம்புடன் முயலகன் இருப்பதனைக் காணமுடியும். இது கி.பி. 13—14-ஆம் நூற்றாண்டில் வடிக்கப்பட்ட சிற்பமாகலாம்.

இந்தக் கோயிலுக்கு அறுபது ஏக்கர் பரப்பு மான்ய நிலமாக இருந்தது. இந்நிலத்தை விவசாயிகள் சிலர் சொந்தமாக்கிப் பயிர் செய்து வருகின்றனர். இந்த விவசாயிகள் கிணறு தோண்டும் போதோ அல்லது நிலத்தைத் திருத்திச் சமன் செய்யும்போதோ சில பொருட்கள் கிடைத்துள்ளன. அவை பெரும்பாலும் மண்பாண்டங்களே. சில தாழிகளும் கிடைத்துள்ளன. இருப்பினும் அவையெல்லாம் அழிக்கப்பட்டுவிட்டன.

வெங்கடேச விண்ணகரம் என்ற கோயில் சிதைந்து விட்டது. நிலத்தைப் பண்படுத்தும்போது இக்கோயிலைச் சுற்றி மண்ணைக்கொட்டி விட்டார்கள். கோயில் இரண்டடி உயரம் மேலே தெரிகிறது. அதுவும் இன்றி ஒரு ஆள் உயரத்திற்குப் புதர் மண்டியுள்ளது. இக்கோயிலில் இரண்டு கல்வெட்டு இருப்பதாக இந்தியக் கல்வெட்டறிக்கை கூறுகிறது.

கோட்டை: இந்தப் பகுதியில் கோட்டை இருந்ததாகக் கூறுகிறார்கள். ஆங்காங்கே காணப்படுகிற மண்மேடுகளைக் கோட்டை அரண் என்று கூறுகிறார்கள். இங்குள்ள கோயில், கோட்டைக் கோயில் என்று வழங்கப்படுகிறது. நிலத்தைப் பண்படுத்திச் சமப்படுத்தி விட்டதால்

கோட்டை இருந்ததற்கான சான்றுகளைக் காணமுடியவில்லை. நாகேஸ்வரர் கோயிலுக்குத் தெற்கில் இரண்டு பர்லாங் தொலைவில் ஒரு குளம் இருந்ததாகவும் கூறப்பட்டது. விவசாயத்திற்காகத் தூர்க்கப்பட்டுவிட்டது. நாகேஸ்வரர் கோயிலுக்கு வடக்கில் இரண்டு பர்லாங் தொலைவில் கரிய காளியம்மன் கோயில் உள்ளது. இங்குள்ள அம்மன் வழிபாட்டில் உள்ளது. வழிபாட்டில் உள்ள சிலைகள் அனைத்தும் தற்காலத்தில் செய்யப்பட்டவை.

காசுகள்: வித்வான் ஐ. இராமசாமி என்பவரிடம் முப்பதுக்கும் மேற்பட்ட பழங்காசுகள் உள்ளன. இராஜராஜன், புவனேகவீரன், சேதுபதி ஆகிய மன்னர்களின் காசுகள் உள்ளன. முதல் இராஜராஜனின் காசு கோட்டைப் பகுதியில் கிடைத்ததாகக் கூறப்பட்டது. மற்ற காசுகள் வட்டாரத்தில் உள்ள பல ஊர்களிலிருந்து சேகரிக்கப்பட்டவை.

முஸ்லீம் மன்னர் காசு: ஒருபுறத்தில் அராபிய எழுத்தும் மறு புறத்தில் யானை, பிறை ஆகிய உருவங்களும் உள்ள காசுகள் உள்ளன.

சாதவாகனர் காசு: இந்தக்காசு இங்கு கண்டெடுக்கப்பட்டதல்ல. பேரூர் தமிழ்க்கல்லூரி, வரலாற்றுக் கண்காட்சிக்கு வேறெங்கிருந்தோ இக்காசு கொண்டுவரப்பட்டது. கண்காட்சி முடிந்தவுடன் இப்போது காசு வைத்திருப்பவரிடம் கொடுக்கப்பட்டுவிட்டது. காசின் ஒருபுறம் உஜ்ஜயினி முத்திரை உள்ளது. மறுபுறம் யானையுடன் "சதகணிஸ" என பிராம்மி எழுத்துக் காணப்படுகின்றது.

## சென்னை மாவட்டம்

மயிலை முண்டகக்கண்ணி அம்மன் கோயில் தெருவில் திருவள்ளுவர் கோயில் அமைந்துள்ளது. இங்கு வள்ளுவருக்கும் வாசுகிக்கும் தனித்தனியே சன்னதிகள் உள்ளன. வழிபாட்டில் உள்ள வள்ளுவர் கோயில் பழுதடைந்த நிலையில் இருந்தது. சிதைந்த கோயிலைச் சீர்திருத்த வேண்டிய நோக்கோடு தமிழ்நாடு அரசு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை இங்கு திருப்பணி தொடங்கியது. அப்பணியின் தொடர்பாகக் கருவறையைச் சுற்றிக் கடைக்கால் தோண்டும் போது கருவறையின் வடகிழக்கே 4' ஆழத்தில் திருவள்ளுவரின் சிலை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இச்சிலையை முண்டகக் கண்ணி அம்மன் கோயிலின் செயல் அலுவலர் திரு. ராஜு அவர்கள் 4-12-74-ஆம் நாள் கண்டுபிடித்தார்.

வள்ளுவர் உருவம் பீடத்தில் இருகால்களையும் மடக்கி அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. தியானநிலையில் வலக்கை சின் முத்திரையுடன் அக்கமாலை ஏந்தியும், இடக்கை ஓலைச்சுவடி ஏந்தியும் காணப்படும் இவ்வுருவத்தின் தலையை முடிந்த கொண்டையும் முகத்தில் நீண்டதாடியும், தொங்குமீசையும், உடலில் ஓடும் நீண்டபட்டையான அங்கியும், இடையில் ஆடையும் அணி செய்கின்றன. கி.பி. 14-15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இவ்வள்ளுவர் சிலை 1·32 மீ. உயரமும், 0 50 செ.மீ. அகலமுமுள்ளது.

## செங்கற்பட்டு மாவட்டம்

செங்கற்பட்டு மாவட்டம் வாலாஜாபாத்திலிருந்து காஞ்சிபுரத்துக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் 'தாங்கி' என்னும் ஊர் அமைந்துள்ளது. இவ்வூரில் சாலையின் வடக்குப் பக்கத்தில் விநாயகர் கோயில் ஒன்றும், பக்கத்தில் குளமும் காணப்படுகின்றன. விநாயகர் கோயில் மிகவும் பிற்காலத்தியது. இக்கோயிலுக்குக் கிழக்குப் பக்கத்தில் ஒரு கருங்கல் மண்டபம் உள்ளது. இது வழிப்போக்கர் மண்டபம் என்று அழைக்கப்படுகிறது.

இம்மண்டபம் முழுவதும் கருங்கல்லால் அமைக்கப்பட்டு நீண்ட சதுரமாக காணப்படுகிறது. முன்பகுதியில் நான்கு தூண்கள் தாங்கப் பெற்ற திறந்த மண்டபமும் உட்பகுதியில் நான்கு தூண்களால் தாங்கப் பெற்ற அடைப்புற்ற மண்டபமும் உள்ளன. மண்டபத்தின் பின்புறச் சுவரின் நடுவில் அனுமன் உருவம் நின்ற நிலையில் சிற்பமாகச் செதுக்கப் பட்டுள்ளது. அச்சுவரின் மேல்பகுதியில் விதானத்தையொட்டி கஜலஷ்மி யின் உருவமும் இருபெண்களின் உருவங்களும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

உட்புற மண்டபத்தின் விதானத்தில் நடுப்பகுதியில் நான்கு கிளி கள் ஒன்று சேர்ந்து ஒரு மலரைக் கொத்துவது போன்று செதுக்கப்பட் டிருக்கிறது. இச்சிற்பம் காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் கோயில் மண்டபத்தில் காணப்படும் கிளிகளின் சிற்பத்தை நினைவூட்டுகிறது. விதானத்தின் ஓரங்களில் ஒரே வேலைப்பாட்டைக் காணமுடிகிறது. மண்ட பத்தைத் தாங்கும் தூண்களில் திருமாலின் அவதாரங்களும் சிவபெரு மானின் பல்வேறு மூர்த்தங்களும் செதுக்கப்பட்டு காட்சி தருகின்றன. சில அகவியல் வாழ்க்கைச் சிற்பங்களும் காணப்படுகின்றன.

உட்புற மண்டபத்தின் மேற்குச் சுவரில் ஒரு கல்வெட்டு காணப் படுகிறது. அக்கல்வெட்டு:

உ விக்கினேஸ்பரர் துணை
சாரி வாகன சகா அப்தம்
சூ ௬௱௯௰௯ மேல் செ
ல்லா நின்ற ஏவிளம்பி ஞ
தையி மீ உ௰௪ உதித்தார் செ
ட்டி மூத்தர் செட்டி தற்ம்ம ப
ரிபாலனம் சுப மஸ்த்து

என்று எழுதப்பட்டுள்ளது. ஆகவே இம்மண்டபத்தை கி. பி. 1777-ல் தித்திர் செட்டி என்பாரும் மூத்தர் செட்டி என்பாரும் அமைத்திருக்கிறார் கள் என்பது தெரியவருகிறது.

இக்கல்வெட்டுக்குப் பக்கத்திலேயே கூப்பிய கரங்களுடன் ஒரு ஆண் ஒரு பெண் ஆகியோர் உருவங்கள் இலேசான புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன.

இக்கல்வெட்டுக்குக் கீழே வீரனெருவன் புலியோடு போரிடும் காட்சி சிற்பமாகக் காணப்படுகிறது. உள் மண்டபத்தின் தெற்குப் பக்கச் சுவரில் மற்ெருரு கல்வெட்டுக் காணப்படுகிறது. அது:

உ விக்கினேசுவரர் துணை சாலிவாகன
சகா அப்தம் ௲ஈ௱ாகமிக ௧்குமேல் செல்
லா நின்ற ஏவிளம்பி ஞு தையி மீ உமிக
உதித்தர் செட்டி மூத்தர் செட்டி தற்ம்மம்
பரிபாலனம் வெங்கிடாசலபதி துணை
உண்டாயி ரஷ்சிக்கவும் சுபமஸ்த்து உ

என்று சொல்கிறது.

அக்கல்வெட்டின் கீழே:

உ அக
ரம் த
ாாங்கி
யிலே

என்று எழுதப் பெற்றிருக்கிறது. இதனல் இவ்வூர் முன்னுளில் அகரம் தாங்கி என்று வழங்கப் பெற்று வந்தமை புலனுகிறது. இம்மண்டபத்தின் தூண் ஒன்றில் இரு ஆடவர் நின்ற நிலையில் கூப்பிய கரங்களுடன் செதுக்கப்பட்டுள்ளனர். இச்சிற்பங்கள் தித்திர் செட்டி, மூத்தர் செட்டி ஆகியோரின் உருவங்களாக இருக்கலாம்.

இம்மண்டபத்திற்கு எதிர்த்திசையில் சாலேயின் தெற்குப் பக்கத்தில் ஒரு கல் நிறுத்தப்பட்டிருக்கிறது. அக்கல்லில் காணப்படும் கல்வெட்டு:

சறுவ சித்தி ஞு
வையாசி மீ உ
யிஉ உ அகரம்
தாங்கி தித்தர்
செட்டி மூத்த
ர் செட்டி தற்ம
மம பரிபாலநம்

என்று எழுதப் பெற்றிருக்கிறது. மண்டபத்தைக் கட்டியவர்களே இக் கல்லேயும் நிறுத்தியிருப்பார்கள் போன்று தெரிகிறது. வழிபோக்கர் தெரிந்து கொள்ளவேண்டும் என்று சாலேயின் ஓரத்தில் இக்கல்லே நிறுத்தி யிருக்கிருர்கள்.

இன்னுளிலும் வழிப்போக்கர்கள் சிலர் இம்மண்டபத்தில் தங்கி உணவு சமைத்து சாப்பிட்டுவிட்டுச் செல்கின்றனர். இம்மண்டபம் மிக நல்ல நிலேயில் காணப்படுகிறது.

*

# அறுபத்து நாலாவது நாயனர்

N. சேதுராமன் B. SC., D.M.I.T.

டைரக்டர், ராமன் & ராமன் (பி) லிட்., கும்பகோணம்

13-ஆம் நூற்ருண்டு; தமிழகத்தில் பாண்டிய சாம்ராஜ்யம் செங்கோலோச்சி நின்ற பொற்காலம் ஆகும். துரதிஷ்டவசமாக 14-ஆம் நூற்ருண்டில் மாலிக் காபூர் மற்றும் அன்னியர்களின் படையெடுப்புக்களால் பாண்டிய ராஜ்யம் சிதறியது. தமிழகத்தில் அராஜகமே தலைவிரித்தாடிற்று. இதற்கு விஜயநகர மன்னர் வீரகம்பண்ண உடையார் ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். 1368-இல் தமிழகத்தை ஆட்டுவித்த அன்னியரின் ஆட்சி ஒழிக்கப்பட்டு. தமிழ்நாடு விஜய நகர சாம்ராஜ்யத்தின் அரவணைப்பின் கீழ் வந்தது.

15-ஆம் நூற்ருண்டில் விஜயநகர சாம்ராஜ்யம் கொடிகட்டிப் பறந்த காலத்தில் ஒரு சில பாண்டிய மன்னர்களும் திருநெல்வேலி ஜில்லா பகுதிகளில் ஆட்சி புரிந்து வந்தனர். இன்றையத் தென்காசித் திருநகரே பாண்டிய மன்னர் களின் தலைநகராக விளங்கியது. அருகில் செங்கோட்டை என்று பெயர் தாங்கித் திகழும் நகரத்தில் கோட்டையும் இருந்தது. இக்காலத்தில் புகழ் மிக்க பாண்டிய அரசனுக விளங்கியவன், அரிகேசரி சடிலவர்மன் திரிபுவனச்சக்ரவர்த்திகள் பராக்கிரம பாண்டியனுவான். இம்மன்னன் கி.பி. 1423-முதல் 1463-முடிய ஆட்சி புரிந்தான்.

பராக்கிரம பாண்டியன் சிறந்த சிவபக்தன்; ஒப்பற்ற கலைஞன்; தமிழ்ப் புலவன்; வடமொழியில் விற்பன்னன். இம்மன்னன் தென்காசியில் காசி விஸ்வநாதர் ஆலயத்தைக் கட்டினுன். ஆலயத்தைக் கட்டி முடிக்க 17 ஆண்டுகள் ஆயிற்று. ஆலயம் கட்ட வேண்டிய சூழ்நிலையும், கட்டப்படும் காலத்தில் கடைப் பிடிக்கப்பட்ட வழி முறைகளையும் அருமையான செய்யுட்பாக்களாகத் தென்காசி ஆலயத்தில் கல்லில் வெட்டி வைத்தான். இப்பாக்கள் கல்நெஞ்சக்காரர்களையும் கரைத்து விடும் தன்மையன. இக்கல்வெட்டுக்களைத் திருவிதாங்கூர் ஆர்கியலாஜிகல் சீரிஸ் பாகம் ஒன்று பக்கம் 93-103-இல் வெளியிட்டுள்ளனர். இவைகளைச் காண்போம்.

1446-ஆம் வருடம் ஒரு நாள் பாரக்கிரம பாண்டியனின் கனவில் சிவனுர் தோன்றினுர்; ''விச்வநாதன் உத்ரகாசியில் எழுந்தருளியிருந்த சிவாலயம் ஜீரணமாகையாலே தென்னுரிநாட்டு சித்ராநதி உத்ரதீரத்திலே நமக்கு தக்ஷிண காசியாக ஆலயஞ்செய்து தரவேணும்'' என்றும் ஆணையிட்டார்.

காசியில் கங்கைக் கரையில் இருந்த விஸ்வநாதரின் ஆலயம் ஜீரணமாகி விட்டது. (பாழடைந்தது என்ற அமங்கலச் சொல் கையாளப்படவில்லை) ஆகவே தென்னுட்டில் சித்ரா நதியின் கரையில் தென்காசி என்பதாக ஓர் ஆலயம் நிறுவ வேண்டுமென்று சிவபெருமான், பாண்டிய மன்னனின் கனவில் கூறினுர். இறைவனின் ஆணையைச் சிரமேற் கொண்டு மன்னனும் தென்காசியில் விஸ்வ நாதனுக்கு மிகப் பெரிய கோயிலை எடுப்பித்தான். இதனில் வரலாற்று உண்மை ஒன்று புதைந்துள்ளது.

அக்காலத்தில் வடநாட்டில் அன்னியரின் ஆட்சி மேலோங்கியிருந்தது. 1444-இல் டில்லியில் சுல்தான் முபாரக்ஷா கொலை செய்யப்பட்டான். இவனுக்கு நேரிடை வாரிசு இல்லாததால், இவ்வரசனின் சகோதரனின் மகனை முகம்மதுஷா அரியணை ஏற்றப்பட்டான். இதனால் முஸ்லீம் பிரபுக்களிடையே கலகம் விளைந்தது. முபாரக்ஷா கொலை செய்யப்படுவதற்குக் காரணமாக இருந்த சர்வார் உல்முல்க் என்பவனைத் தட்டிக் கேட்க ஆள் இல்லாமல் இருந்தது. முடிவில் படுகொலைகளும் இரத்தக்களறிகளும் ஏற்பட்டுச் சுல்தானின் வம்சம் அழிந்தது; லோடி வம்சம் தலை தூக்கிற்று. இக்கலவரங்களில் இந்துக்கள் பெரிதும் பாதிக்கப் பட்டனர். கங்கைக்கரையில் இருந்த காசி விஸ்வநாதர் ஆலயமும் பாழடைந்தது.

வடநாட்டில் இந்தியக் கலாசாரத்திற்கு ஆபத்து ஏற்பட்டால், தென்னாடு கை கொடுத்துக் காப்பாற்றியதும் உண்டு. இதன் எதிரொலியே தென்காசி விஸ்வநாதர் ஆலயம் எனலாம். பராக்கிரம பாண்டியன் தென்காசியில் சிவ பெருமானுக்கு ஆலயம் எடுப்பித்தான். ஆலயம் எடுப்பிக்கப்பட்ட வரலாற்றுச் செய்தியினைக் கல்லிலும் வெட்டி வைத்தான். இச்செய்தியினைக் காண்போம்:

தி. ஆ. சி. பாகம் ஒன்று பக்கம் 95 எண் 3;

1. கோயில் கட்ட ஆரம்பித்தல்

அன்பினுடன் சகாத்தம் ஆயிரத்து முந்நூற்று
அறுபத்தெட் டதன்மேல் வைகாசித் திங்கள்
மன்தியதி ஈரைந்தில் பூருவ பக்கம்
மருவு தெச மியில்வெள்ளி வாரம் தன்னில்
மின் திகழ்உத் திர நாள் மீனத்தில் வாகை
வேல்அரிகே சரிபராக் கிரம மகீபன்
தென் திசையிற் காசிநகர்க் கோயில் காணச்
சென்றுநின்று கர்ழ்சணை தான் செய்வித்தானே

கர்ஷணம் செய்வித்த நாள் (கோயில் கட்டத் துவங்கிய நாள்)

அ) சகம் 1368
ஆ) வைகாசி மாதம்
இ) பத்தாம் தேதி
ஈ) வளர்பிறை தசமி
உ) உத்திர நக்ஷத்திரம்
ஊ) வெள்ளிக்கிழமை
எ) மீன லக்கினம்

இந்நாள் 9-5-1446-க்குச் சரியாக வருகிறது. மீன லக்கினம் என்பது இரவு 2 மணி முதல் $3\frac{1}{2}$ மணி வரை வரும். வெள்ளிக்கிழமையும், உத்திர நக்ஷத்திரமும் சேர்வதால் அன்று சித்தயோகம் திகழ்ந்தது.

2) அடுத்து சிவலிங்கப் பிரதிஷ்டையும் அபிஷேகமும்

அடைவுதிகழ் சகாத்தம் ஆயிரத்து முன்னூற்று
அறுபத்து எட்டின்மேல் செல மிதுன ஞாயிற்று

மருவு தியதி பதினெ .........(1)......
...விற் சனிவாரமதனில் மீனத்தில்
மன ..........(2)...........
....டைய வரைத் தென்காசிச் சிவாலயத்தின்
உள் அமைத்துத் தெள் அமுதம் ஊட்டினனே.

இந்நாளில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தான். அந்நாளாவது

அ) சகம் 1369 இன் மேல் சென்றது, அதாவது 1370,

ஆ) மிதுனமாதம் (ஆனிமாதம்)

இ) தேதி "பதினெ" என்று உள்ளது. இதனைப் பதினெழு அல்லது பதினெட்டு என்றும் படிக்கலாம். (கணக்கிடும் போது இத்தேதி பதினெட்டு என்று வருகிறது)

ஈ) சனிக்கிழமை

உ) மீனலக்கினத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு அபிஷேகம் நடந்தது. மீனலக்கினம் இரவு 11-லிருந்து $1\frac{1}{2}$-வரை ஆகும்.

இந்நாள் 15-6-1448-க்குச் சமமாக வருகிறது. (1) பகுதியில் 11 எழுத்துக்கள் மறைந்துள்ளன. அப்பகுதி 18-ஆம் தேதியையும் அதற்குரிய அடைமொழியையும் அறிவிக்கின்றது. (2) பகுதியில் 28-லிருந்து 30 எழுத்துக்கள் மறைந்துள்ளன. அப் பகுதியில் பக்ஷம், நக்ஷத்திரம் இவை இருக்க வேண்டும். 15-6-1448 அன்று பகல் முழுவதும் மூல நக்ஷத்திரம் இருந்தது. பகலில் அபர பக்ஷத்து சதுர்த்தசி விளங்கியது.

தவிரவும் 15-6-1448 அன்று இரவு மூல நக்ஷத்திரம் திகழும் தருணம் பௌர்ணமி ஆரம்பித்து, அன்று இரவு முழுமதி பொங்கியது. இது ஆனி மூலத்து நாள். சிவபெருமானுக்கு உரிய நாள் இந்நாளில் சிவனார் பிரதிஷ்டை செய்யப் பட்டார். (2) பகுதியில் அபரபக்ஷம் சதுர்த்தசி மூல நக்ஷத்திரம் என்று இருக்க வேண்டும். சனிக்கிழமையில் மூலம் திகழ்ந்ததால் சித்தயோகம் விளங்கியது. இரவு 11 மணிக்கு மேல் 1 மணிக்குள் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்யப்பட்டது. அபிஷேகமும் நடந்தது. (ஆனி மூலத்தில் அனேக சிவத்தலங்களில் இறைவன் தீர்த்தம் கொடுக்கும் உத்சவம் உண்டு, காரைக்கால் அம்மையார் மாங்கனி பெற்ற உத்சவ நாளும் இதுவே ஆகும். இறைவன் வேண்டுவோர்க்கு வேண்டுவன தரும் நாள் ஆனிமூலமாகும். திருஞானசம்பந்தரின் திருமயிலாப்பூர் பதிகத்தினால் ஆனியில் பெருஞ்சாந்தி என்னும் பவித்ரோத்சவம் நடைபெறும் மரபையும் அறியலாம். இவ் வுத்சவம் குடமுழுக்கு இடும் விழாவின் பலனைக் கொடுக்குமாம்).

3) அடுத்து கோபுரம் கட்ட ஆரம்பித்தல் :

பன்னுகலி யுகம்நாலா யிரத்தைந்நூற்
றைம்பத்தெட்டின் மேல்எவரும் பணிந்துபோற்றச்
செந்நெல்வயல் தென்காசி நகரில்நற்
கார்த்திகைத் திங்கள் தியதி ஐந்திற்செம்பொன் வாரம்
மன்னியமார் கழிநாளில் மதுரை வேந்தன்
வடிவெழுதொ ணாத பராக்கிரம மகீபன்
சொன்னவரைபோல் திருக்கோபுரமும் காணத்
துடையிடையாய் உபானமுதல் தொடக்கினனே

ஏராருஞ் சகாத்தம் ஆயிரத்து முன்னூற்று
எழுபத்து ஒன்பதின்மேல் கார்த்திகை மாதத்திற்
சீராருந் தியதி ஐந்திற் குருவாரத்திற்
சிங்க முகூர்த்தத்தில் மிருகசீரிழசத் தன்னில்
அரன் அருளால் வழுதி பராக்கிரம மகீபன்
கூர் உபானம் முதல் கோட்டினனே

இவ்விரு செய்யுட்களிலும், கோபுரத்திற்கு அஸ்திவாரம் இட்டதும், அடி நிலே துவக்கம் செய்ததும் சொல்லப்பட்டுள்ளன. இவ்விரு செய்யுட்களில் உள்ள குறிப்புக்கள் ஒன்றுதான். அவை நேர் சமமானவை. பெயர் மாற்றிச் சொல்லப்பட்டனவே அன்றி வேறுபாடுகள் எவ்விதத்திலும் இல்லே.

| விவரம் | செய்யுள் 3 | செய்யுள் 4 | விளக்கம் |
|---|---|---|---|
| வருடம் | கலி 4558 | சகம் 1379 | இரண்டும் ஒன்றுதான் |
| மாதம் | கார்த்திகை | கார்த்திகை | |
| மாதத்தேதி | ஐந்து | ஐந்து | |
| கிழமை | செம்பொன்வாரம் | குருவாரம் | வியாழக்கிழமை |
| நக்ஷத்திரம் | மார்கழி | மிருகசீரிஷம் | இரண்டும் ஒன்றுதான் |
| லக்கினம் | | சிங்கம் | |

(தமிழில் கலியுகம் 4558 என்று தி. ஆ. சி. வெளியிட்டுள்ளது. ஆனல் ஆங்கில விளக்கத்தில் 4555 என்று தவறுதலாக வெளியிடப்பட்டு உள்ளது. பக்கம் 98-இல் ஆங்கில மொழிபெயர்ப்பில் வருடத்தைத் தவிர மற்ற குறிப்புகள் சமமானவை என்பதையும் காணலாம்). இச்செய்யுட்களில் கோபுரத்திற்கு அஸ்திவாரம் இட்ட நாளாகிய அடிநிலைத் துவக்கநாள் கூறப்படுகிறது. இந்நாள் 3-11-1457க்குச் சமமானது. அன்று கார்த்திகை மாதம், ஐந்தாம் தேதி, வியாழக்கிழமை, மிருகசீரிஷ நஷத்திரம் ஆகியவை இடம் பெறுகின்றன. சிம்மலக்கினம் என்பது இரவு 11-மணி முதல் 1 மணி வரை திகழும்.

இச்சுபநாளில் துரதிஷ்டவசமாக ''மரணயோகம்'' நிகழ்ந்தது. மன்னனின் பிறந்தநாள் நஷத்திரம் மிருகசீரிஷம் என்பதை அடுத்த கல்வெட்டால் அறியலாம். (தி. ஆ. சி. பக்கம்-99). தான் பிறந்த நஷத்திரத்தில் மன்னன் இப்பணியைத் துவக்கினன். ஆனல் . . . வியாழக்கிழமை மிருகசீரிஷம் தோன்றினல் மரணயோகம் என்று சாத்திரம் கூறுகிறது. மரணயோகம் நன்மை பயக்காது. இது எத்துணேக்கு உண்மை என்பது நமக்குத் தெரியாது. இரவானதால் யோகம் பார்க்கவில்லேயோ? நமக்குப்புரியவில்லே. ஆனல் சரித்திரம் கண்ட உண்மை ஒன்று உள்ளது. (மரணயோகத்தில் துவக்கப்பட்ட) இக்கோபுரம் முடிவடைவதற்குள், ஆறு ஆண்டுகளில் மன்னன் மாண்டு போனன். மன்னன் இறந்த பிறகே கோபுரம் கட்டிமுடிக்கப்பட்டது

மன்னனின் மறைவு :

செய்யுள் 8-இலும், 13-இலும் மன்னனின் மறைவு கூறப்பட்டுள்ளது

செய்யுள் 8 :

காண்டகு சீர்புனே தென்காசிக்
கோபுரக் கற்பணி ஆ

றுண்டில் முடித்துக் கயிலைசென்றான்
அகிலேசர் பதம்
பூண்டுறை சிந்தை அரிகேசரி
விந்தைப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள்
பராக்கிரம பாண்டியனே.

கோபுர அஸ்திவாரம் 3-11-1457-இல் இடப்பட்டது. இக்கோபுரம் முழுவதும் கட்டப்படுவதற்குள் 6-ஆம் ஆண்டில் பராக்கிரம பாண்டியன் இறைவன் திருவடி அடைந்தான். (எஞ்சி நின்ற பணியை மன்னனின் தம்பியான அழகன் பெருமாள் குலசேகர பாண்டியன் என்பவன் செய்து முடித்தான். தி. ஆ. சீ பாகம்-1 பக்கம்-103).

செய்யுள் 13–இல் மன்னன் மறைந்தநாள் கூறப்படுகிறது:

ஏரார் சகாத்தம் முன்னூற்றுடன் ஆயிரத்து
எண்பது ஐந்திற் சீரார் மார்கழி
(சி)த்(திரை நா)ளிற் சிறந்து குற்றம்வாராத
பூரணையினிற் பராக்கிரம மாரனென ...
... ரா ..... ரகியிலாயந்தான் ....
......... ....கண்டனனே.

சகம் 1385-இல் மார்கழி பௌர்ணமி அன்று மன்னன் சிவனுரின் திருவடி அடைந்தான். இந்நாள் 24-12-1463 ஆகும். மார்கழிப் பௌர்ணமி அன்று திருவாதிரை நக்ஷத்திரம்தான் திகழும். இது கணித சாத்திரமும் பஞ்சாங்கமும் கண்ட உண்மை. மார்கழிப் பௌர்ணமி நாளில் சித்திரை நக்ஷத்திரம் வராது. கல்வெட்டில் இவ்விடம் சிதைந்துள்ளது. இப்பகுதியை "சித்திரை" என்று குறித்துள்ளார்கள், திருவாதிரை என்றே இச்சிதைந்த பகுதியினை நிரப்பவேண்டும்.

24-12-1463 மார்கழித் திருவாதிரை நாள்! பௌர்ணமி நாள்! தில்லைப் பொன் னம்பலநாதன் நடராசனுக்கு உரிய நாள்! பராக்கிரம பாண்டியனும் ஆருத்திரா தரிசனத்தை முன்னிட்டு கயிலாயத்திற்கே சென்றுவிட்டான்! இறப்பது என்பது ஒரு நாள் நடந்தே தீரும். ஆனால் மார்கழித் திருவாதிரையில் இறப்பதற்கும் இறை வனின் அருளாசி வேண்டும். இதனைப் பரிபூரணமாகப் பெற்றான் பராக்கிரம பாண்டியன்.

தென்காசி ஆலயம் கட்டியது

1. 6-5-1446 வெள்ளிக்கிழமை இரவு 11 மணிக்கு மேல் 1 மணிக்குள் துவக்கம்
2. 15-6-1448 சனிக்கிழமை இரவு 11 மணிக்கு மேல் 1 மணிக்குள் சிவலிங்கப் பிரதிஷ்டை, அபிஷேகம்.
3. 3-11-1457 வியாழன் இரவு 11 மணிக்கு மேல் 1 மணிக்குள் கோபுரம் கட்ட அஸ்திவாரம் இடுதல்-
4 24 12-1463 மார்கழித் திருவாதிரையில் மன்னன் சிவனுரின் அடியார்களின் கூட்டத்தில் கலந்துவிட்டான். கோபுரம் பிற்காலத்தில் முழுமையாகக் கட்டிமுடிக்கப்பட்டது.

துவக்க விழாக்களை இரவில் லக்கினம் பார்த்து அமைக்கக் காரணம் என்ன? பாண்டிய மன்னன் பராக்கிரமன் சந்திரகுலத்தைச் சேர்ந்தவன்.

பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசை கலைமகள் நலனுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்து அவதரித்து . . .''

என்னும் இம்மன்னனின் மெய்க்கீர்த்தியால், அரசன் சந்திரகுலத்தைச் சேர்ந்தவன் என்பதை அறியலாம். ஆகவே சந்திரமானம் என்னும் காலக் கணக்கீட்டு முறையைத் தழுவி விழாக்கள் இரவில் துவக்கப்பட்டன.

மன்னன் 17-ஆண்டுகள் இத்திருப்பணியில் ஈடுபட்டான். இவ்வாலயம் கட்டப் படும் காலத்தில் பராக்கிரம பாண்டியன் ஆற்றிய அறச்செயல்களை அடுத்த கல் வெட்டுக்களால் அறியலாம்.
தி ஆ சீ. பாகம் ஒன்று

கல்வெட்டு எண் 2, பக்கம் 91. இதன் காலம், 29-வது ஆட்சி ஆண்டு பௌர்ணமியும் வெள்ளிக் கிழமையும் இணைந்து வரும் நாள். மாதத் தேதி 21; மாதத்தின் பெயர் அழிந்துவிட்டது. இருந்தபோதிலும் காலக் கணக்கீட்டின் வாயிலாக இக்கல்வெட்டின் காலம் சித்திரை மாதம் 16—4—1451 என்பதை அறியலாம்.

கல்வெட்டு எண் 4, பக்கம் 99 இதன் காலம் 1384-இன் மேல் சென்றது; மிதுன மாதம் 28-ஆம் தேதி அபரபக்ஷம் திரயோதசி, மிருகசீரிஷம் வெள்ளிக் கிழமை ஆகும். இதன் காலம் 25-6-1462 ஆகும்.

இக்கல்வெட்டுக்களில் மன்னன் செய்த திருப்பணிகள் கூறப்பட்டுள்ளன. தென் காசி விச்வநாதர் ஆலயத்தின் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மஹாமண்டபம், முதலியன கட்டி முடிக்கப்பட்டன. விச்வநாதனும், அன்னை உலகுடைய நாச்சியாரும் பிரதிஷ்டை செய்யப்பட்டனர், சகஸ்ரலிங்க ஆலயம், சக்திபீடம், ரிஷபதேவர் முதலான பரிவார தேவதைகள் ஆகியவைகளும் நிறுவப்பட்டன. காளிகோயிலும் கட்டப்பட்டது. ஐந்தாம் தெருவில் விநாயகனுக்குக் கோயில் கட்டப்பட்டது. ஆற்றங்கரையில் திருவிழாவிற்காக ஸ்நானகட்டம் அமைக்கப்பட்டது. மடைப்பள்ளி மற்றும் பல மண்டபங்களும் கட்டப்பட்டன. திருவிழாக்களும், பூசை வழிபாடுகளும் நிவந்தங்களும் ஏராளமாக ஏற்படுத்தப்பட்டன. மாசிமக உற்சவம் ஏற்படுத்தப் பட்டது. இத்துணைச் சிறப்புக்கள் செய்த அம்மன்னன்,

(அ) கோயிலைத் தான் கட்டியதாகக் கூறவில்லை; காசி விச்வநாதன் அருளால் அமைந்தது என்று கூறுகிறான்.

(ஆ) பிற்காலத்து மக்கள் இவ்வாலயத்தைக் காப்பாற்ற வேண்டும் என்றும் இறைஞ்சுகிறான்.

இதோ பராக்கிரம பாண்டியனே பகருகின்றான்:

சேலே றியவயல் தென்காசி
ஆலயம், தெய்வச் செய
லாலே சமைந்தது. இங்கு என்
செயல் அல்ல. அதனை இன்னும்
மேலே விரிவு செய்தே புரப்பார்
அடி வீழ்ந்து, அவர் தம்

பால், ஏவல் செய்து பணிவேன்
பராக்கிரம பாண்டியனே 1

மனத்தால் வகுக்கவும் எட்டாத
கோயில் வகுக்க முன்நின்று
எனைத்தான் பணிகொண்ட நாதன், தென்
காசியை என்றும் மண்மேல்
நினைத்து ஆதரம்செய்து தம்காவல்
பூண்ட நிருபர்பதம்
தலைத்தாழ்ந்து இறைஞ்சித் தலைமீது
யானும் தரித்தனனே 2

ஆரா யினும்இந்தத் தென்காசி
மேவும்பொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்,
அப்போது அங்குவந்து அதனை
நேரா கவேஒழித்துப் புரப்பார்களை
நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன்
பராக்ரம பாண்டியனே 3

பூந்தண் பொழில்புடை சூழும்தென்
காசியைப் பூதலத்தில்
தாம்தம் கிளையுடனே புரப்பார்கள்,
செந் தாமரையாள்
காந்தன் பராக்கிரமன் கைதவன்
மான கவசன் கொற்கை
வேந்தன் பணிபவர் ஆகி,
எந்நாளும் விளங்குவரே 4

அரிகே சரிமண் பராக்ரம
மாறன் அரன்அருளால்
வரிசேர் பொழில்அணி தென்காசிக்
கோயில் வகுத்து வலம்
புரிசேர் கடற்புவி போற்றவைத்தேன்
அன்புபூண்டு இதனைத்
திரிசேர் விளக்கெனக் காப்பார்
பொன்பாதம்என் சென்னியதே 5

சாத்திரம் பார்த்திங்கு யான்கண்ட
பூசைகள் தாம்நடத்தி
ஏத்தி அன்பால் விசுவநாதன், பொற்
கோயில் என்றும் புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்ரம
மாறன், பரிவுடன்நம்
கோத்திரம் தன்னில் உள்ளார்க்கும்
அடைக்கலம் கூறினனே 6

மன்னன் 24-12-1463 அன்று மறைந்தான். புலவனும், கல்வெட்டாளனும் கசிந்து உருகிக் கண்ணீர்விட்டு ஒரு சோக கீதத்தையே கல்லில் வடித்துவிட்டனர்.

கோதற்ற பத்தி அறுபத்து
மூவர்தம் கூட்டத்திலோ,
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத்தோ,
செம்பொன் அம்பலத்தோ,
வேதத் திலோ, சிவ லோகத்திலோ,
விசுவநாதன் இரு
பாதத்தி லோசென்று புக்கான்
பராக்ரம பாண்டியனே.

இரும்பு தரும் மனத்தவரையும் ஈர்த்து ஈர்த்து என்பை உருக்கிக் கரும்பு தரும் பெருஞ்சுவையினைக் கழிமிக நல்கிக் களிப்பிக்கும் இக்கவிதைகளில் தமிழ்த் தேனும் தெய்வ அமுதமும் இணைந்தோடுகின்றன. 'சித்தம் புகுந்து உள்ளம் தித்திக்கவைக்கும்' பாக்களைப் பராக்கிரம பாண்டியன், நிரந்தரமாகக் கல்வெட்டில் அமைத்துவிட்டான். கல்லும் சொல்லும் கவிதைகள் இவை. கற்பனை இல்லை.

பராக்கிரம பாண்டியன் பொன்னம்பலநாதனின் பேரம்பலத்தை அடைந்தான். விச்வநாதனின் பாதத்தாமரையில் ஒன்றிவிட்டான். கோதற்ற பக்தி அறுபத்து மூவர் கூட்டத்திற் சேர்ந்துவிட்டான். சுந்தரமூர்த்தி நாயனுர் அருளிய பதிகத்தில், "அப்பாலுக்கு அப்பாலும் அடிச்சார்ந்தோர்க்கு அடியேன்" என்பதின் உட்பொருளைப் பராக்கிரம பாண்டியனுக்த ஏற்றிவைத்து, அம்மன்னனை 'அறுபத்து நாலாவது நாயனுராகப்' போற்றித் துதி செய்து அந்நாயனுரின் பாதம் பணிவோமாக.

---

## டேனிஷ்பர்க் கோட்டையைத் தமிழ்நாடு அரசு ஏற்றது

தரங்கம்பாடியில் உள்ள "டேனிஷ்பர்க்" கட்டிடமும், கோட்டையும் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் மாநில வரலாற்றுச் சின்னமாக பாதுகாக்கப்படும். தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களில் தலை சிறந்தவர் ரகுநாத நாயக்கர்; டேனிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியார் தரங்கம்பாடியில் வாணிகத் தளம் அமைக்க அனுமதி அளித்தார். அதன்படி டேனிஷ் கம்பெனியார் ஆண்டுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை நாயக்க மன்னருக்கு வரியாகச் செலுத்து வார்கள். நாயக்கருடைய நாட்டில் அவர்கள் வாணிகம் செய்யவும் தரங்கம்பாடியில் கோட்டை அமைத்துக் கொள்ளவும் அவர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. சற்றேறக்குறைய 17-ஆம் நூற்றுண்டின் மத்தியில் டேனிஷ் என்ஜினியர்களால் இந்தக் கோட்டையும் கட்டிடமும் அமைக்கப்பட்டது. இங்கு ஒரு சர்ச், பெரிய மாளிகைஅறை, அலுவலகம் முதலியவை உடைய கட்டிடம் எழுப்பப்பட்டது. சுற்றிலும் பெரிய கோட்டை மதில்கள் கட்டப்பட்டன. கி.பி. 1780-இல் இந்த கோட்டை பழுதுபார்க்கப்பட்டது. கி.பி. 1855-இல் டேனிஷ் அரசர் தரங்கம் பாடிப்பட்டிணத்தை இங்கிலிஷ் கம்பெனியாருக்கு விற்று விட்டார். இவற்றுக்குப் பின்னர் இது பொதுப் பணித்துறையினரால் பாதுகாக்கப்பட்டு வந்தது அண்மையில் தமிழ்நாடு அரசு அதை வரலாற்றுச் சின்னமாக பாதுகாக்க முடிவெடுத்தது. அரசு ஆணைப்படி மாநில தொல்பொருள் ஆய்வுத்துறை இதைப் பராமரிக்கும் பணியேற்றுள்ளது.

# பல்லவர் காலத்துத் துர்க்கை

சென்னை, தேனும்பேட்டையில் 'காரனட்' மூர்த்தி என்பவருக்குச் சொந்தமான சிற்பக் கிடங்கில் பல சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் துர்க்கை சிற்பம் ஒன்று மிகவும் சிறப்பு வாய்ந்தது. இது பல்லவர் காலத்தைச் சார்ந்தது என்பதை அண்மையில் தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை கண்டுபிடித்துள்ளது.

இச்சிற்பம் ஆறு அடிக்கு மேல் உயரமுடையதாய்ப் பல்லவர் கால எல்லாக் கலைப் பாணிகளுடனும் காணப்படுகிறது. எருமைத் தலை மீது நின்ற நிலையில் எண் கரங்களைக் கொண்டு அன்னை காட்சி தருகிறாள். வலது மேற்கரத்தில் பிரயோக நிலையில் சக்கரமும், மற்ற இரண்டு கரங்களில் முறையே வாள், அம்பும், நான்காம் கரம் கடக ஹஸ்தமாகவும் உள்ளது. இடது மேற்கரத்தில் சங்கும், மற்ற கரங்களில் இரண்டில் கேடயம், வில்லும் காணப்படுகின்றன. நான்காம் கரம் கட்யவலம்பித ஹஸ்தத்தில் உள்ளது.

அன்னையின் இடப் பக்கம் மான் நிற்கும் நிலையில் காணப்படுகிறது. மான் வலப்பக்கம் தலையைத் திருப்பி அன்னையைப் பார்க்கும் நிலையில் இருக்கிறது. சிற்பத்தின் இரு மருங்கிலும் வட்டெழுத்தில் கல்வெட்டு காணப்படுகிறது. இதில் கல்வெட்டு உள்ளது என்பதை இத் துறையின் பதிவு அலுவலர் திரு. நடன. காசிநாதன் கண்டு பிடித்தார்.

அக்கல்வெட்டு

சிற்பத்தின் வலப்பக்கம் :

1. பரம்மீ
2. ட்டியாருக்
3. கு அவிப்புதுண்
4. ண [இநெலீ ௨ ௨]
5. வுகைச் சேற வு
6. ண்டுத்தன்
7. வயல் [இவ]
8. ர்மகன் நண்
9. டுகணன்

சிற்பத்தின் இடப்பக்கம்:

1. சிருவன் [க]
2. வி . ஆரு .

என்று ஓரளவுக்குப் படிக்க முடிகிறது.

துர்க்கை, பரமீட்டியார் என்று இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளார், வுண்டுத்தன் என்பானின் மகன் நண்டுகணன் சிருவன் கவி. ஆரு இத்துர்க்கைக்கு அமுது படைப்பதற்காக நிலக்கொடை அளித்ததைக் குறிப்பதாகக் காணப்படுகிறது.

கல்வெட்டின் எழுத்தமைதியும், சிற்பத்தின் உருவ அமைதியும் இச் சிற்பம் சுமார் கி.பி. 7-ஆம் நூற்றுண்டைச் சார்ந்தது என்பதைத் தெளி வாக்குகின்றன.

சில ஆண்டுகளுக்கு முன்பு இதைப்போன்றதொரு துர்க்கைச் சிற்பம் சென்னைப் பல்கலைக் கழகத் தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் செங்கற்பட்டு மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. அதிலும் துர்க்கை மான், சிம்மம் ஆகியவற்றோடு காட்சி தருகிருள். இருப்பினும் அச்சிற்பத்தில் கல்வெட்டு ஏதும் இல்லை. ஆகவே கலைப் பாணியாலும், கல்வெட்டுச் சான்றுலும் தேனும்பேட்டைச் சிற்பம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகவும், காலத்தால் முந்தியதாகவும் காணப்படுகிறது.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை இச்சிலையைக் கைப்பற்றி மதுரைத் திருமலை நாயக்கர் மஹால் அருங்காட்சியகத்தில் காட்சியில் வைக்கத் திட்டமிட்டுள்ளது.

---

## எட்டாம் நூற்றுண்டு வட்டெழுத்துக் கல்வெட்டு

முகவை மாவட்டம் சாத்தூர் வட்டம் குலசேகரபுரம் கிராமத்தில் 17-10-76-ஆம் நாள் நடந்த ஆய்வில் கி, பி. 8-ம் நூற்றுண்டின் முற்பகுதியைச் சார்ந்த கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு குலசேகரபுரம் அய்யனுர் கோயில் அருகிலுள்ள புஞ்சை நிலத்தில் மதுரை பதிவு அலுவலராலும், காப்பாளராலும் கண்டுபிடிக்கப்பட்டது. சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்பு நிலத்தின் மண்ணைத் தோண்டியபோது இக்கல்வெட்டுத்துண்டு வெளிக் கொணரப்பட்டதாகக் கிராமத் தினர் கூறினர்.

கல்வெட்டின் முழுவாசகம் கிடைக்கவில்லை. கீழ்ப்பகுதி மட்டும் கிடைத் துள்ளது. இதில் 6 வரிகள் உள்ளன. எழுத்து வட்டெழுத்து. மொழி தமிழ். எழுத் துக்கள் சாய்வாக எழுதப்படாமல் நேராக எழுதப்பட்டுள்ளன. இக்கல்வெட்டில் உள்ள இ, ய, ந, ட முதலிய எழுத்துக்கள் பழமை வாய்ந்ததாகக் காணப்படு கின்றன. இக்கல்வெட்டு இதுவரை மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறை கல் வெட்டுப் பிரிவினரால் படி எடுக்கப்படவில்லை. இக்கல்வெட்டில் உள்ள குறில் எழுத்துக்களும், மெய் எழுத்துக்களும் புள்ளியிடப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. இக்கல்வெட்டு 18-10-75-ஆம் நாள் தி. நா. அரண்மனை அருங்காட்சியகத் திற்குக் கொண்டுவரப்பட்டது. கல்வெட்டின் வாசகம் வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| 1 | . . . ஆற்று[ந] பெருமகள் உய | 4 | டார் மணற்குடி பாப்பார் சா |
| 2 | ர் பிரமதாய்ய பெற்றமை தெருட்டு | 5 | ன்ருர் வடஇருக்கை அறி நாட்டா |
| 3 | கொல்லாறு விட நடந்து கொண் | 6 | த்தெல்லையாக நட்ட கல். |

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை மதுரை இராமநாதபுர மாவட்டங்களில் இரண்டு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த எல்லைக்கற்களைக் கண்டுபிடித்து உள்ளது. மதுரை மாவட்டம் மேலூர் அருகில் உள்ள பெருமாள் மலையின் பகுதியான இரட்டைக்கல் என்ற குன்றில் கி. பி. 13-ஆம் நூற்றுண்டைச் சார்ந்த மற்றொரு கல்வெட்டு உள்ளது. இதில் 'நாயனுர் திருமுகப்படி திருமுகூர் நாட்டு தேவதானம் பட்டூர்க்கு எல்லை' என எழுதப்பட்டுள்ளது.

# கல்வெட்டுக்கள் கூறும் நீர்ப்பாசனம்

பண்டைய தமிழகத்தில் நிலவிய நீர்ப்பாசனங்களைப் பற்றி கல்வெட்டுக் களில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. இவைகள் அன்று நீர்ப்பாசனங்கள் எவ்வாறு வழங்கின என்பதற்கு அடிப்படையான ஆதாரங்களாகத் திகழ்கின்றன. இவற்றை நோக்குப்போது நீர்ப்பாசனத்திற்கு எவ்வளவு கவனம் செலுத்தினர்கள் என்பது தெளிவாக விளங்கும். இது சங்ககால மரபையொட்டி மலர்ந்தது என்பதில் ஐயமில்லை. பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வேளாண்மையின் சிறப்பை எடுத்துரைக்கும் குடபுலவியனர். "நீர் நிலைகளைப் பெருக்கி உணவு உற்பத்திக்கு வழி தேடுவதால் மற்ற அனைத்தைக் காட்டிலும் பெரும் சிறப்புப் பெறுவாய்" எனக் கூறுகிறர்

செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ ஆகல் வேண்டினும் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்
தகுதி கேளினி மிகுதி ஆள
நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினேரே
வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகல்
வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்கு உதவாதே அதனல்
அடுபோர்ச் செழிய இகழாது வல்லே
நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவன் தட்டோரே.

அதன் அடிப்படையில் கிணற்றுப்பாசனம், கால்வாய்ப் பாசனம், ஏரிப்பாசனம் முதலியவை பல்லவர் காலத்தும் சோழர் காலத்தும் திகழ்ந்ததைக் கல்வெட்டு களிலிருந்தும் செப்பேடுகளிலிருந்தும் அறிகிறோம்.

### கிணறுகள்

நிலங்களுக்கு நீர் பாய்ச்ச பல கிணறுகள் வெட்டப்பட்டன. இவ்வாறு கிணறுகள் வெட்டுவதைக் 'கிணறு தொட்டல்' அல்லது 'கிணறு குழித்தல்' என்று குறிப்பர். தனியார் கிணறு தோண்ட விரும்பின் ஊர்ச்சபையிடம் அனுமதி பெற வேண்டும் என்றும், ஊராய் இருந்தால் அரசனிடமிருந்து அனுமதி பெற வேண்டும் என்றும் அறிகிறோம். "துரவு கிணறு இழிக்கப்பெறுவதாகவும்" என்று தண்டந் தோட்டம் செப்பேடுகள் கூறுவதிலிருந்து அரச ஆணை பெற்றுத்தான் கிணறுகள் தோண்டப்பட வேண்டும் என்று ஊகிக்கலாம். மூன்றும் நந்திவர்மனுடைய

வேலூர்ப் பாளையம் செப்பேடுகளும் "துரவு கிணறு இழிக்கப் பெறுவதாகவும்", என்று கூறுவதிலிருந்து கிணறு தோண்டும் உரிமையும் அரசனால் அளிக்கப்பட்டது என்பது தெளிவு. பல்லவராயன் பராந்தக வீர நாராயணன் கொடுத்த ஒரு வயலில் இரண்டு கிணறு இருந்ததென்றும், இவற்றால் பயன் பெறும் நிலங்களை அளித்தான் என்றும் தளவாய்புரம் செப்பேடுகள் கூறுகின்றன, "பருத்தி வயக்கலும், இவ் வயல்களில் கிணறுகள் இரண்டும் அக்கிணற்றால் விளை நிலனும்" என்பது செப் பேட்டு வாசகம். கொடுத்த வயல்களில் கிணறுகள் மூன்று இருந்தன என்றும் அக்கிணறுகளில் எப்பொழுதும் நீர் இருந்ததென்றும், அக்கிணறுகளால் விளையும் வயலனைத்தும் இறையிலியாக அளிக்கப்பட்டன என்றும் அச்செப்பேடு கூறுகிறது.

ஏரியிலிருந்து வாய்க்கால் வெட்டிக் கொள்ளவும் அரசன் அனுமதி பெற்றனர். அதே போன்று ஆற்றிலிருந்து வாய்க்கால் தோண்டவும், வெள்ளம் வரும் போது அந்நீரைப் பெற வெள்ளக்கால் தோண்டவும் அரசு அனுமதி தேவை. "செய்யாற் றாலும், வெஃகாவினாலும் திரையன் ஏரியாலும் நீர் ஈந்த வழி ஆற்றுக்காலும் வெள்ளக்காலும் தோண்டிக் கொண்டு உண்ணப் பெறுவராகவும்" என்று காசாக் குடி செப்பேடு கூறுகிறது. அதுமட்டுல்ல இவற்றிற்கு இடையிலே நீர் இறைத்தால் அரசனால் தண்டிக்கப்படுவர் என்பதை அச்செப்பேடு "இக்கால்களில் கூடை இறைத்தும், குறங்கறுத்தும் குற்றேத்தம் பண்ணியும் கொண்டு உண்டார் கோக் கொள்ளுந் தண்டம் படுவதாகவும்" என்று குறிக்கிறது. இதிலிருந்து இவ்வாய்க் கால்கள் எதற்காகத் தோண்டப்பட்டனவோ அதற்கு இடையூறு ஏற்படாமல் காத்தல் மன்னனின் கடன் என்றும் அறிகிறோம், இதே கருத்தைப் பல்லவ மன்னன் நந்தியின் புல்லூர் செப்பேடுகள் கூறும். "இவ்வூர் ஏரிகளுக்கு ஆற்றுக்கால் நீரிந்த வழி தோண்டிக் கொண்டுண்ணப் பெறுவாராகவும் இக்கால்கள் கூடை பறித்துக் குற்றேத்தம் பண்ணியும் குறங்கறுத்தும் கொள்ளப் பெறுதாராகவும், கொண்டார் கோவினால் தண்டிக்கப்படுவாராகவும்" என்று கூறுகிறது.

வாய்க்கால்கள்

சில ஊர்கள் புதிதாக நிர்மாணிக்கப்பட்ட போது அங்குப் பல வாய்க்கால்கள் புதியதாக வெட்டப்பட்டன. இவை முக்கிய வாய்க்கால்களாக அமைக்கப்பட்ட போது இவைகளுக்குப் பெயரிடுவது திட்டமிட்டு செய்யப்பட்டது என்று அறிகிறோம். உத்தரமேரூரில் தந்திவர்மன் காலத்தில் (8-ஆம் நூற்றாண்டு) புதியதாக வாய்க் கால்கள் அமைக்கப்பட்டன. இவை வைரமேக தடாகத்திலிருந்து ஊர் நிலங்களுக்கு நீர்பாய அமைக்கப்பட்டவை. இவற்றின் பெயர்கள் தெய்வங்களின் பெயர்களாக ஸ்ரீதேவி வாய்க்கால், கணபதி வாய்க்கால், சரஸ்வதி வாய்க்கால், பார்வதி வாய்க் கால், சுப்ரமணிய வாய்க்கால் என்று பெயர் பெற்றிருந்தன கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, என்பவற்றில் புருஷோத்தம வாய்க்கால், மாதவ வாய்க்கால், வாசுதேவ வாய்க்கால் என்பவை குறிக்கப்படுகின்றன. இதிலிருந்து 12 பெயர்களையும் வாய்க்காலுக்கு இட்டிருக்கின்றனர் என்று ஊகிக்கலாம்.

தெய்வங்களின் பெயர்கள் மட்டுமின்றி ஊர் அமைத்தவர்களின் பெயர் களாலும் வாய்க்கால்கள் அழைக்கப்பட்டன. செம்பியன் மாதேவி என்னும் ஊர் கண்டராதித்த சோழரின் தேவியாரால் ஏற்படுத்தப்பட்டது. அவ்வூரில் அமைந்த வாய்க்கால்கள் அத்தேவியின் பெயர்களாலும், அவள் கணவன் பெயராலும் அழைக்கப்பட்டன. செம்பியன் மாதேவி வாய்க்கால், பராந்தகன் மாதேவி வாய்க் கால், மாதேவடிகள் வாய்க்கால் முதலிய பெயர்கள் அத்தேவியாரின் பெயரால் வந்தவை. இவை தவிர அவ்வூரில் கண்டராதித்த வாய்க்கால் ஒன்றும் பழுவூர் நக்கன் என்னும் வாய்க்கால் ஒன்றும் இருந்தன என அறிகிறோம். இதிலிருந்து ஓர்

ஊரைப் புதிதாக அமைக்கும் போது வேளாண்மைக்கு வேண்டியவற்றைத் திட்டமிட்டு அமைத்து அவற்றிற்கு பெயர்கள் இட்டனர் என்று அறியலாம்.

இதைத் தவிர பல வாய்க்கால்கள் அரசர்களின் பெயர் தாங்கி நிற்பதைக் கண்டால் அவர்கள் நீர் பெருக்க எவ்வளவு பணி செய்தனர் என்பது புரியும். சுந்தரசோழன் வாய்க்கால், காரிகால் சோழன் வாய்க்கால், இராஜராஜன் வாய்க்கால் என பல அரசர்களின் பெயர்கள் கொண்ட வாய்க்கால்கள் கல்வெட்டில் குறிக்கப்பெறுகின்றன.

ஆற்றிலிருந்து நேராக நிலங்களுக்குப் பாயும் வாய்க்கால்கள் இருந்தன. இவை ஆற்றுக்கால் என்று அழைக்கப்பட்டன. உய்யக்கொண்டான் திருமலையில் 'வயிரமேகவாய்க்கால்' குறிக்கப்பட்டுள்ளது. காவிரியிலிருந்து பிரியும் உய்யக் கொண்டான் வாய்க்கால்' வயிரமேக வாய்க்காலாக இருக்கும்.

ஆற்றிலிருந்து குளங்களுக்கும் ஏரிகளுக்கும் நீர்ப்பாய்ச்சும் வாய்க்கால்களை குறங்கு, கால், கிளைக்கால், ஓடை என்று அழைத்தனர். ஆறு பெருக்கிடும் போது வாய்க்கால்களால் நிலத்திற்குப் பாய்ச்சுவதும் அறிந்ததே. இவ்வாய்க்கால்களுக்கு வெள்ளக்கால் என்று பெயர். ஊற்றிலிருந்து கால்வெட்டி பயிர் செய்வதும் உண்டு. அதை ஊற்றுக்கால் என்பர். ஆறுகள் கோடையில் வறண்ட போது இது பயன்பட்டது.

பல்லவ மன்னன் பரமேச்சுரவர்மன் காலத்தில் கூரம் என்னும் கிராமத்தில் பரமேச்சுர தடாகம் என்னும் ஏரி தோண்டப்பட்டது. இதற்குப் பாலாற்றில் இருந்து நீர் கொண்டு வர பெரும்பிடுகுக்கால் என்னும் கால்வாய் தோண்டப்பட்டது. 'இவ்வூர் பரமேச்சுர தடாகத்திற்குப் பாலாற்று நின்றும் தோண்டின பெரும் பிடுகு கால்' என்று கூரம் செப்பேடு (வரி 78, 79) கூறுகிறது. இப்பொழுது தென்னேரி என்று அழைக்கப்படும் ஏரி முன்னர் திரையன் ஏரி என்று அழைக்கப்பட்டது. இத்திரையன் ஏரிக்குச் செய்யாற்றிலிருந்து, வெஃகாவிலிருந்தும் நீர் கொண்டு வரப் பட்டது. இந்நீர் கொண்டு வரும் கால்களிலே வெள்ளக்காலும் ஆற்றுக்காலும் தோண்டிக் கொள்ளலாம் என நந்திவர்மன் ஆணையிட்டான். இவ்வாறு ஆறுகளிலிருந்து ஏரிகளுக்கு நீர் கொண்டு வரும் கால்களையும் ஆற்றுக்கால் என்று அழைத்தனர் என்று புல்லூர் செப்பேடுகளால் அறிகிறோம். 'இவ்வூர் ஏரிகளுக்கு ஆற்றுக்கால் நீரிந்த வழி தோண்டிக் கொண்டு உண்ணப் பெறுவராகவும்' என்று செப்பேடு கூறுகிறது. இவ்வாறு கால்கள் தோண்டுவது அரசின் அனுமதி பெற்றுத் தான் செய்ய வேண்டும் என்பது 'இவர்களுக்கு ஆற்றுள் நின்றும், ஏரிகள் நின்றும் நீரிந்த வழி தோண்டிக் கொண்டு போவாராகவும்' (புல்லூர் 122, 123 என்பதால் தெளிவாகிறது.

ஏரிகள்

நீர்ப்பாசனத்துக்கு இன்றியமையாததான ஏரிகள் ஏராளமாக மன்னர்களாலும் பிறராலும் தோண்டப்பட்டன. பல்லவ அரசி சாருதேவியின் செப்பேட்டில் ராஜதடாகம் குறிக்கப்படுகிறது திரையன் ஏரி என்பது, சங்க காலத்துப் புகழ் பெற்ற திரையனால் தோற்றுவிக்கப்பட்டது போலும். பல்லவ மன்னன் மஹேந்திரவர்மன் சோளிங்கருக்கு அருகில் மஹேந்திர தடாகம் என்னும் பெரும் ஏரியைத் தோற்றுவித்தான். அதே போன்று மாமண்டூரில் உள்ள சித்ரமேக தடாகம் என்பது இம்மன்னனால் தோண்டப்பட்டிருக்க வேண்டும் என்று அறிஞர் கருதுவர். கூரம் கிராமத்தில் பரமேச்சுர தடாகம் என்னும் ஏரி பல்லவ மன்னன் பரமேச்சுரன் காலத்தில் தோண்டப்பட்டது.

பல்லவ ஏரிகளில் மிகவும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. உத்தரமேரூரில் உள்ள வயிர மேக தடாகம் என்னும் பேரேரியாகும். இது இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் தோன்றியிருக்க வேண்டும். இதே போல் கங்கை கொண்ட சோழ புரத்தில் முதல் இராஜேந்திர சோழனால் தன் கங்கை வெற்றியின் எடுத்துக் கட்டாக தோண்டப்பட்டது, கங்கை கொண்ட சோழப் பேரேரி. இதற்கு சோழ கங்கம் என்று பெயர். பராந்தக சோழன் காலத்தில் அவன் பெயரால் ஏற்படுத்தப் பட்டதே இப்போது வீராணம் என அழைக்கப் பெறும் வீரநாராயணன் ஏரி என்ப தாகும். அதே அரசன் காலத்தில் 'சோழவாரிதி' என்னும் பேரேரி ஒன்று சோளிங்கருக்கு அருகில் ஏற்பட்டது.

ஏரிகுழித்தல்

இவ்வாறு தோண்டப்பட்ட ஏரிகள் அடிக்கடி மண்மேடு இட்டுத் தூர்ந்து விடும். ஆகையால் இவற்றை அடிக்கடி ஆழம் செய்யவும், ஏரிக்கரையை அடிக்கடி உயர்த்தவும், பலர் பொருள் கொடுத்து உள்ளனர். இது ஒரு பெரும் அறமாகக் கருதப்பட்டது. பாண்டிய மன்னன் சடையன்மாறன் என்பவன் காலத்தில் இருப்பைக்குடி என்னுமிடத்தில் இருப்பைக்குடி கிழவன் என்பவன் குளத்தின் கரை பழமையாக இருந்ததை எடுத்து விட்டு அடியில் கல் இட்டுப் புதிதாக கரை இட்டு மடைகள் வைத்து அதற்கு இருப்பைக்குடி கிழவன் ஏரி என்று பெயர் இட்டான் என்று அறிகிறோம் 'இவ்வாண்டு பழங்கரை இழித்து அதனடியில் கல்லு நட்டி, மன்னுமடைக்கு மேற்கு கருங் குளத்துக்கு கிழக்கு நிலைத்திட்டு கரை செய்து மடை வைப்பித்து இருப்பைக்குடி கிழவன் என்று தன் பெயரிட்டு ஏறுவித்தது'' *(43/14)* என்று கல்வெட்டு கூறுகிறது. மதுரை மாவட்டத்து இராமநாதபுரத்து பாண்டியன் மாறஞ்சடையன் காலத்தில் நக்கன் புள்ளன் என்பவன் தன் பெயரால் ஓர் ஏரி தோண்டி கற்கோதி குமிழி செய்வித்தான். ஆனால் பணி பாதிலேயே நின்று விட்டது. நக்கன் புள்ளன் இடையில் இறந்திருக்கக்கூடும் அவன் மகன் புள்ளன் நக்கன் என்பவன் குறைப்பணியை முற்றுவித்தான். இங்கு பணி செய்தவன் தச்சன் வடுகன் கூற்றன் என்பவன். குறைப்பணியை முடித்தவன் அத்தச்சன் மகன் ஆதலின் அவர்களுக்கு அக்குளத்தின் கீழ் தலைநீர் பாயும் நிலம் ஓரொரு வயலைப் புள்ளன் நக்கன் அளித்தான் *(26/14)*

இது போன்று ஏரிக்கு செய்த பல அறங்களை உத்தரமேரூர் கல்வெட்டுகள் கூறுகின்றன. பல்லவ மன்னன் நந்திவர்மன் காலத்தில் தானவேந்தன் என்பவன் ஊர் சபையாரிடம் 20 கழஞ்சுப் பொன் கொடுத்தான். அவர்கள் அவ்வூரில் இருந்த ஒவ்வொரு சேரியைச் சேர்ந்த நிலத்திருந்தும் வந்த எரு விலையைக் கொண்டு மாதந் தோறும் குழி குத்துவதாக ஒப்புக் கொண்டனர். ''வயிரமேக தடாகத்து உட்குழி குத்துவதாக சுட்டிக் குடுத்தோம்'' *(358/6)*. இவ்வேரியில் ஒடம் விடுவதற்காக தானி புத்தடிகள் என்பவரின் தாய் 100 கழஞ்சு பொன் கொடுத்தாள். தானி புத்தடிகள் என்பவன் இரண்டாவது ஓடம் விடவும். அதற்கு வேண்டிய வழி செய்யவும் 100 கழஞ்சு பொன் கொடுத்தான். இப்பொன் கொண்டு ஆள் கூலி உள்ளிட்டு நாள் ஒன்றுக்கு ஒரு குழியாக ஒரு ஆண்டுக்கு 360 குழி மண் வெட்டி எடுத்து கரை ஏறக் கட்டுவதாக ஊர்ச் சபை எற்றுக் கொண்டது (353/6). இதே ஏரியை மண்வெட்டி கரைகட்ட திருக்கழுக்குன்றன் என்பவன் கம்பவர்மன் காலத்தில் 100 கழஞ்சு பொன்னும் 208 காடி நெல்லும் கொடுத்தான். அதிலிருந்து வரும் வட்டியிலிருந்து குழிகுத்தி கரை கட்டுவதாகச் சபை ஏற்றது. வைகாசி மாதம் முதல் இரண்டு திங்கள் ஆண்டாண்டு தோறும் செய்வதாகச் சபை ஏற்றது. இதை இவ்வூருக்குத் தர்மம் என்று கல்வெட்டு கூறுகிறது. இதே மன்னன் காலத்தில்

ஒருவர் ஏரிகுழிகுத்தி கரைக்கு மண் கட்ட பொன் கோயிலில் கொடுத்தார். அதனுல் சபை மகிழ்ந்து அவனுக்கு பல வரி விலக்குகள் அளித்தது (369/6).

இதே ஊரில் காரிகைக்குட்டம் என்ற ஏரிக்குச் சுற்றிலும் ஒரு கோல கலத்துக்கு கரை இருந்தது. அதைச் சுற்றிலும் அரைக் கோலகலத்துக்கு வெளிப் பூமியாக அமைக்க இருவர் பொன் கொடுத்து நிலம் வாங்கி வைத்தனர். அக்கரையில் மண் எடுப்பாரையும் முள் குத்துவாரையும், நீர் விட்டாரையும் தண்டிக்கச் சபை ஏற்றது (370/6).

இராஜராஜ சோழன் காலத்தில் அரிகேசரி மங்கலத்தில் ஏரி உடைந்து குளமாய்க் காடாய் கிடந்தது. இவ்வேரிப் பாசனம் உள்ளிட்ட நாடுகளை வகை செய்கின்ற அரச அதிகாரி அரையன் அம்பலக்கூத்தன் என்பவன் "குளத்தை குழிச்சு பெருங்கரை கட்டி வைத்து காடும் வெட்டுவித்து மடைகளும் எடுப்பித்து பரமேசுர பேரேரி என்று பெயரிட்டான்" என்று அறிகிறோம் (724/5). விண்ணமங்கலம் என்னும் ஊரில் ஏரியின் மீனை விற்று அதிலிருந்து வந்த பொன் கொண்டு ஏரியை ஆண்டு தோறும் கல்லுவிக்க வகை செய்தனர் (459/6).

ஏரி வெட்டி ஆற்றிலிருந்து நீர் கொணர்ந்து பயிர் செய்ய ஒரு குடும்பமே வகை செய்தது. நாற்பத்தெண்ணுயிரப் பிள்ளையும் அவர் தமக்கை மங்கையர்க் கரசியும் தங்கள் பொருள் இட்டு நிலம் திருத்தினர்கள். இதற்கு அண்ணு நாட்டு எல்லையில் திருத்திகை என்ற ஆற்றை அடைத்து ஏரிவெட்டி தூம்பு இட்டு நிலம் திருத்தினர்கள். மங்கையர்க்கரசி இறந்து போனள். பிள்ளையும் வயதால் தளர்ந்து போனர். ஏரியை சரிவர பராமரிக்க முடியவில்லை. ஏரி பல இடங்களில் உடைந்தது. ஆறும் உடைந்தது. கழனியெல்லாம் காடாகி நெடுநாள் பாழாகிக் கிடந்தன. பிள்ளையின் மருமகன் தொண்டைமா நாச்சியார் என்பவனே ஏற்றி மடைகள் அடைப்பித்து கலிங்கும் இட கல்வெட்டி கொடுத்தார்கள். இவ்வாறும் இப்பணி செய்ய முடியாமல் போனதால் நிலம் பாழாய்க் கிடந்தது. அதனுல் நாற்பத்தெண்ணுயிரப் பிள்ளையின் மக்கள் சபையாரிடம் சென்று "எங்களால் ஆறு அடைத்து ஏரியில் மடைகளும் அடைத்து கலிங்கும் கட்ட முடியாது. நீங்கள் உங்கள் பொருள் இட்டு இப்பணி செய்யுங்கள்; நாங்கள் முன்பு செய்ததுக்கு கொல்லை காடு கழனியில் மூன்றில் ஒரு பங்கு எங்களுக்கு விட்டு இருகூறு நீங்கள் அனுபோகியுங்கள்" என்று கூறினர். அதனுல் ஊரில் எட்டு பேர்கள் சேர்ந்து பொருள் இட்டு இப்பணி செய்ய ஒப்புக்கொண்டனர். அவர்களுக்குப் பிள்ளையின் மக்கள் எழுத்திட்டுக் கொடுத்து விட்டனர். அப்பொருள் கொடுத்த எண்மரில் ஒருத்தி அல்லூர் தேவரடியாள் திருவம்பலம் பிரியாத பிள்ளை என்பவள் (83/8).

இவ்வாறு அரசர், மாதேவியார், அதிகாரிகள், தனியார், பெண்டுகள் என சமுதாயத்தைச் சேர்ந்த பல்குடி மக்களும் பொருள் கொடுத்து ஏரிகளை நல்ல நிலையில் வைத்திருக்க பெரிதும் முயன்றிருக்கின்றனர்.



# எட்டிச்சாத்தன் இட்டமதகு

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் காலக் கல்வெட்டு ஒன்று இராமநாதபுர மாவட்டம் சின்னக் கொல்லப்பட்டி என்ற இடத்தில் இருந்தது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ள இந்தத் தமிழ்க் கல்வெட்டு பாண்டிய மன்னன் நெடுமாறனால் அமைக்கப்பட்ட மதகைச் சாத்தூருக்கு அருகிலுள்ள இருக்கன்குடியில் இருந்த எட்டிச்சாத்தன் என்பவன் பழுதுபார்த்ததைத் தெரிவிக்கிறது. இவன் புதுக்குளத்திலும், பெருங்குளத்திலும் செங்கற்களையும், கருங்கற்களையும் கொண்டு மதகுகளை அமைத்தான். இந்த இருப்பைக்குடித் தலைவனான எட்டிச் சாத்தன் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் (சாத்தூரிலும்) அவ்வூரைச் சுற்றிய பல ஊர்களிலும் நீர்பாசனப் பணிகள் செய்வதில் மிக்க அக்கறை காட்டியிருக்கிறான். இவன் பாண்டிய மன்னன் ஸ்ரீமாறவல்லபனுக்குக் கீழ் பணிபுரிந்தவன். இம்மன்னன் காலத்தில்தான் புதுக்கோட்டைக்கருகிலுள்ள சித்தன்னவாசல் குடைவரைக் கோயில் ஓவியங்கள் தீட்டப்பட்டன. இம்மன்னன் காலத்தில்தான் பெரியாழ்வார் வாழ்ந்தார். எட்டிச்சாத்தன் செய்த நீர்பாசனப் பணிகள், அமைத்த மடைகள், ஏரிகள் மற்றும் எடுப்பித்த கோயில்கள், சமணப்பள்ளி முதலியவற்றைக் குறிக்கும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஒரு கல்வெட்டு இருக்கன்குடியில் இருந்தது. அந்தக் கல்வெட்டு இப்பொழுது அழிந்து போய்விட்டது.

கல்வெட்டு :

1 ஸ்ரீகோச்சடைய மாறற்கு
2 யாண்டும் அ அவ்வாண்டு
3 இருஞ்சோழ நாட்டுச் சாத்த
4 னூ[ரே]வன் பணிந்த திருநெடு
5 மாறன் வைய்ப்பித்த மடை
6 சிதைந்து கிடந்தன பிற்றை
7 க்கல்வித் தூலம் கண்டு இரு
8 ப்பைக்குடிகிழவ நாஇன
9 எட்டிசாத்தன் பெருங்குள
10 த்து வெப்பமடை கருங்கல்லா
11 லும் பொன்நான் மடைஉம் பூ
12 ங்குறி மடைஉம் புதுக்குள
13 த்து செந்நீர் மடைஉம் இ
14 ட்டிகைஆலும் உத்திரப்படை
15 யாக வைப்பித்து செய்
16 வித்தான் ‖ ஆட்டுமின்கள
17 வன் வைநீரன்றுயிற்செந்
18 நெல் நாறிர் சூட்டுமின்க பூ
19 மொழியைச் சாராதேய் காட்டு மி
20 ன்களின் கோ[......]

# சென்னையில் பௌத்தச் சிற்பம்

சென்னை மாநகரில். இராயப்பேட்டை மருத்துவனைக்கு அருகில் உள்ள பெரியபாளையம் மாரியம்மன் கோயிலுக்குப் பக்கத்தில் காணப்படும் பாம்புப் புற்று ஒன்றில் மிகவும் அழகிய புத்தர் சிற்பம் இருந்ததைத் தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை கண்டு பிடித்துள்ளது.

இச்சிலை ஆந்திரதேசத்தில் நாகார்ஜுன கொண்டா அமராவதி ஆகிய இடங்களில் காணப்பெறும் பௌத்த ஸ்தூபங்களில் பயன் படுத்தப் பட்டிருக்கும் ஒருவகையான பளிங்குக் கல்லினால் ஆனது. இத்தகைய கல் ஆந்திர மாநிலத்தில் தான் கிடைக்கிறது. இந்தக் கற்கள் இற்றைக்கு 1700 ஆண்டுகளுக்கு முன்பாக பௌத்தச் சிற்பங்கள் செதுக்குவதற்குப் பெரிதும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

அமராவதி, நாகார்ஜுனகொண்டா பௌத்தப்பள்ளிகளில் காணப்படும் பௌத்தச் சிற்பங்கள் இந்தியக் கலை வரலாற்றில் ஈடு இணையற்றவையாகும். அங்குக்காணப்பெறும் சிற்பங்களின் கலைப்பாணியிலேயே சென்னையில் கிடைத்துள்ள சிற்பமும் காணப்படுவதால் இச்சிற்பம் கி. பி. 2-3-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கூறலாம்.

சென்னையில் இதுவரையில் கிடைத்துள்ள சிற்பங்களில் இதுவே மிகவும் தொன்மையானதாகும்.

இங்குக் கிடைத்துள்ள சிற்பத்தில் நடுவில் பௌத்த ஸ்தூபம் சித்திரிக்கப் பட்டுள்ளது. ஸ்தூபத்தின் இரு மருங்கும் தியான நிலையில் அமர்ந்திருப்பாராகப் புத்தர் பிரானின் இரு மருங்கும் பக்கத்துக்கு ஒருவராக இயக்கர்கள் சாமரம் வீசுவதாகக் காட்டப்பட்டுள்ளனர். மிகவும் எழிலார்ந்த இச்சிற்பம் கீழ்ப்பகுதியில் உடைந்து காணப்படுகிறது.

பளிங்குக் கல்லினால் செய்யப்பெற்ற புத்தபாதம் ஒன்று காவிரிப்பூம் பட்டினத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் பளிங்குக் கல்லில் மிகப் பழமையான புத்தர் சிற்பம் கிடைத்திருப்பது இதுவே முதலாவதாகும். இச்சிற்பத்தை இத்துறையின் பதிவு அலுவலர் திரு. நடன. காசிநாதன் கண்டு பிடித்தார்.

---

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைக்காக ஷை துறையின் அச்சகத்தில்
இத்துறை இயக்குநரால் அச்சிட்டு வெயிளிடப்பெற்றது.
ஆசிரியர் இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி. எம் ஏ; பி.எச் டி.